உ

குருபாதம்

# ஞானசம்பந்தம்

மலர் 38 | சித்தார்த்தி - ஆடி - 10—8—79 | இதழ் 9

திருச்சிற்றம்பலம்

பொன்தயங் கிலங்கொளிந் நலங்குளிர்ந்த புன்சடை
பின்தயங்க ஆடுவாய்! பிஞ்ஞகா! பிறப்பிலீ!
கொன்றையம் முடியினாய்! கூடலால வாயிலாய்!
நின்றயங்கி யாடலே நினைப்பதே நியமமே. —சம்பந்தர்.

திருச்சிற்றம்பலம்

## சுதந்திரத் திருநாள் சிந்தனை

**விழலென நீத்தோம் :**

ஏறத்தாழ இருநூறு ஆண்டுகளுக்கு மேலாக ஆங்கிலேயரின் கீழ் அடிமைப்பட்டுக்கிடந்த பாரதத்திருநாடு 1947 இல் விடுதலை பெற்றது. தமக்கு இழைக்கப்பெற்ற அநீதி கண்டு கொதித்தெழுந்த மக்கள், அண்ணல் காந்தியடிகளின் தலைமையின்கீழ், 'கத்தியின்றி ரத்தமின்றி' அகிம்சா யுத்தம் ஒன்றைத் தொடுத்தனர்.

" நீதியிலா மன்னர் இராச்சியமும், நெற்றியிலே
பூதியிலார் செய்தவமும், பூரணமாம் — சோதி
கழலறியா ஆசானும், கற்பிலரும் சுத்த
விழலெனவே நீத்து விடு "

என்ற தருமையாதீனக் குரு முதல்வர் ஸ்ரீ குருஞானசம்பந்தர் வாக்கிற் கிணங்க நீதியிலாமன்னர் இராச்சியத்தை விழலென நீத்து வீர சுதந்திரம் பெற்ருேம். நாடு விடுதலை பெற்ற பின், நம்மை நாமே ஆண்டுகொள்வதற்குப் புதிய அரசியல் சட்டங்கள் இயற்றினேம். நாடு குடியரசு ஆட்சியின்கீழ் வந்தது.

**தற்சோதனைத் திருநாள் :**

உலகின் மிகப்பெரிய ஜனநாயகநாடு இந்தியா. ஆண்டுகள் 32 கடந்துவிட்ட பிறகும், ஜனநாயகம் நம் நாட்டில் சோதனைக்களத்தில் ஆராயப்பட்டு வருகிறதேதவிர ஆழ வேரூன்றிவிடவில்லை. அரசியல் வாதிகள் முறையற்ற போக்குகளால் சுதந்திரதீபம் அணைந்துபோய் விடுமோ என்ற அச்சத்திற்கு நாம் அடிக்கடி ஆளாகி வருகிருேம். 'போதிய கல்வியறிவு இல்லாத மக்கள் கையில் ஜனநாயகத்தை ஒப்பு விப்பது தற்கொலைக்குச் சமமானது' என அறிஞர் ஒருவர் கூறிய கூற்று இந்திய நாட்டிற்கும் பொருந்திவிடுமோ என எண்ணத் தோன்றிய காலங்களும் உருவாகி மறைந்தன. சுதந்திரத் திருநாள் என்பது கொடியேற்றி, இனிப்பு வழங்கி, கூடிக் கலையும் சம்பிரதாய நாள் அன்று; நம்மை நாமே தற்சோதனை செய்து கொள்வதற்குக் கிடைத்த அரிய வாய்ப்பாக இந்நாளை நினைவுகூர்தல் வேண்டும். எப்போது நம்மிடையே ஒற்றுமை குலைந்து, தன்னலம் தலைவிரித் தாடியதோ அப்போதுதான் நாம் அடிமைப்பட்டோம் என்ற உணர் விளை நினைவுக்குக் கொண்டுவந்து, மீண்டும் ஒருமுறை நாம் முன் செய்த பிழைகளைச் செய்யாதிருக்க உறுதிபூணும் நாளாகச் சுதந்திரத் திருநாள் அமைதல் வேண்டும்.

**எது சுதந்திரம் ?**

சுதந்திரமாக வாழ நினைப்பதும் — கட்டுப்பாடுகளை வெறுப்பதும் உலகவர் இயற்கை. நமக்குச் சுதந்திரம் வந்து 32 ஆண்டுகள் ஆயின. கட்டுப்பாடுகளைக்கடந்து, தன்னிச்சையாக, கேட்பாரின்றிக் களித்துத்திரியும் உரிமை என்பது சுதந்திரத்தின் பொருளாகிவிடாது. தாய்தந்தையரின் கீழ் வளரும் ஒருகுடும்பத்திலிருந்து, அங்கிருக்கும் கட்டுப்பாடுகள் பிடிக்காது மனைவியோடு வெளியேறிவிடும் ஒருவன் தன்னிச்சைப்படி வாழ இயலாது. தனிக் குடும்பத்தில் முன்னைக் காட்டிலும் அவன் கண்ணுங்கருத்துமாக இருத்தல்வேண்டும், இல்லை என்ருல் அயலார் சிலருக்கு அவன் அடிமையாக நேரிடும். எனவே விடுதலைபெற்ற நாட்டில் மக்கள் பொறுப்புணர்ச்சி - சகிப்புத்தன்மை- நேர்மை - சிக்கனம் முதலிய உயரிய குணங்களை உடைமைகளாகக் கொண்டு வாழப்பழகுதல் வேண்டும்.

## ஆன்ம விடுதலை எப்போது ?

சான்றோர் பலர் கூறுவதுபோல அரசியல் சுதந்திரம் மட்டுமே நமக்கு உறுதி செய்யப்பட்டுள்ளது. பொருளாதாரம் மற்றும் மத நம்பிக்கை போன்றவற்றில் இன்னும் பரிபூரண நிலைமை உருவாகவில்லை. மேலும், நாம் பெற்றிருக்கும் சுதந்திரத்தின் தன்மையை இன்னும் ஆழமாக ஆராய்ந்தால் வேறு சில அரிய உண்மைகளை நாம் தரிசிக்க முடியும், மக்கள் வாழ்வில் உடலும் - உயிரும் தனித் தனி பிரித்தே ஆராயப்படுதல் வழக்கு. அன்னியனை அகற்றி நாம் பெற்றிருக்கும் விடுதலை உடலுக்குக்குக் கிடைத்த விடுதலையே அன்றி உயிருக்குக் கிடைத்த விடுதலையாகிவிட முடியாது. ஆங்கிலேயரின் ஆட்சி, ஆதிக்கம், சுரண்டல் போன்ற விலங்குகளால் கட்டப்பெற்றுக்கிடந்த நமது கால்கள் அவற்றைத் தகர்த்து விடுதலைபெற்றன என்பது உண்மைதான். ஆனல் அநாதியாயே நம் உயிர்களைப் பிணைத்து நிற்கும் ஆணவம், கன்மம், மாயை என்ற மும்மலவிலங்கினை ஒடித்து நாம் ஆன்மவிடுதலை பெறுவது எப்போது ?

## அப்பரடிகள் காட்டிய அரிய வழி :

அரசியல் மற்றும் பொருளாதார விடுதலையால் பொன்னும் பொருளும் பெற்று வாழலாம். ஆனல் உள்ளார்ந்த மகிழ்ச்சியும், நிறைவும் இவற்ருல் கிடைத்தல் இல்லை. இதற்கு என்னவழி என்பதை ஆயிரத்துமுந்நூறு ஆண்டுகளுக்குமுன் வாழ்ந்திருந்த அப்பரடிகள் அழகுறக் குறித்தருளினர். ஒருவகையில் அப்பரடிகள் அன்று நிகழ்த்திய போராட்டம் கொடுங்கோன்மைக்கு எதிரான விடுதலைப் போராட்டமே. அவர்களது வாக்கிலே ஒரு அரிய நுட்பம் நமக்குக் கிடைக்கிறது. மன்னன் ஏவிய அமைச்சர்கள் அழைக்க வந்தபோது வரமறுத்து,

“ நாமார்க்கும் குடியல்லோம் ”

என்று, முடியாட்சிக்கு உட்பட்டவரல்லர் எனப் பாடுகிருர். இந்த இறுமாப்புக்குக் காரணம் பாடலின்பின்னே வருகிறது.

“ தாமார்க்கும் குடியல்லாத் தன்மையான
சங்கரன் நற் சங்கவெண் குழையோர் காதில்
கோமாற்கே நாம்என்றும் மீளா ஆளாய்க்
கொய்ம்மலர்சே வடியிணையே குறுகி னேமே. ”

நாம் ஒரு மனிதனுக்கு அடிமையில்லை; ஆனல் யார்க்கும் குடியல்லாத பரிபூரண சுதந்திரனுகிய சிவபெருமானுக்கே அடிமை என்கின்ருர்.

இதையே இந்த நூற்றாண்டில் வாழ்ந்த - வீறுகொண்ட தேசியக் கவிஞர் பாரதியாரும்,

" பூமியில் எவர்க்கும்இனி அடிமை செய்யோம்—பரி
பூரணனுக்கே அடிமை செய்து வாழ்வோம் !

எனக்குறித்தார்.

**எல்லாம் உனது பதம் :**

எனவே, நம்மைத் தீவினையில் செலுத்தி, நமது தூய செயல்களை எல்லாம் நடக்க ஒட்டாது மறைப்பித்து, யான் எனது என்னும் அகப்புறப்பற்றுக்களை உருவாக்கும் இருவினைகளாகிய தளைகளிலிருந்து நம் உயிர் பெறும் விடுதலையே உண்மையான விடுதலையாகும். இதனைப்பெறுவதற்கு நல்ல ஆசாரியன் துணைவேண்டும். ஆசாரியன் காட்டும் வழி நின்று ஆண்டவன் திருவடிகளே தஞ்சமென்று சரண் புகும் பக்தி வளரவேண்டும். தாயிடம் தஞ்சம் புகுந்துவிடும் குழந்தைக்கு எல்லாம் தாய் அன்பில்தானே கிடைக்கும், அதுபோல எல்லாம் நீயே என்று இறையடிசாரும் எண்ணம் வளர்ந்தால் ஆன்ம விடுதலையும், ஆன்ம ஈடேற்றமும் பெற்று வாழ்தல் உறுதி. இதனை,

" எல்லாம் உனதுபதம்; எல்லாம் உனது செயல்
எல்லாம் உனதருளே என்றிருந்தால் - பொல்லாத
மாதுயரம் நீங்கும்; மருவும் உனதடிக்கே
ஆதரவாய்ச் சொக்கநாதா "

என்று சொக்கநாத வெண்பாவில் ஸ்ரீ குருஞானசம்பந்தர் அழகுற விளக்குகிறார். எனவே நமது இந்திய நாட்டின் 33 வது சுதந்திரத் திருநாளைக் கொண்டாடும் இந்நேரத்தில், பெற்ற சுதந்திரத்தைப் பேணிக் காக்கத் தலைவர்களும் மக்களும் உறுதி பூணுவதோடு, பெறவேண்டிய ஆன்ம சுதந்திரத்தினை நினைந்து, பரிபூரண சுதந்திரனான சிவபரம்பொருளின் திருவடிகளில் தஞ்சம் புகுவோம். அத் திருவடிகளே அனைத்துச் சுதந்திரங்களையும் அளிக்கவல்லன.

வாழ்க பாரதம் !

வளர்க சுதந்திரம் !

உ

குருபாதம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம்

26-ஆவது குருமகாசந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த

பரமாசாரிய சுவாமிகள்

விளாகம்

ஸ்ரீ பெரியநாயகி உடனுகிய ஸ்ரீ அமரபுரீசுவரசுவாமி திருக்கோயில்

கும்பாபிஷேக விழாவின் முதல்நாள்

வழங்கியருளிய

# ஆசியுரை

10—7—79

" புவனியில் போய்ப்பிற வாமையில் நாள்நாம்
போக்குகின் றோம் அவ மேஇந்தப் பூமி
சிவனுய்யக் கொள்கின்ற வாறென்று நோக்கித்
திருப் பெருந் துறையுறை வாய்திரு மாலாம்
அவன்விருப் பெய்தவும் மலரவன் ஆசைப்
படவும்நின் அலர்ந்தமெய்க் கருணையும் நீயும்
அவனியில் புகுந்தெமை ஆட்கொள்ள வல்லாய்
ஆரமு தேபள்ளி எழுந்தரு ளாயே "

விளாகத்தின் விளக்கம் :

நாளை இவ்வூர்த்திருக்கோயிலில் கும்பாபிஷேக விழா நடைபெற இருக்கிறது. விளாகம் எனும் இவ்வூரின் பெயர் பற்றித் தெரிந்து கொள்வது நலமாகும். 'விளாகம்' என்ருல் 'சுற்றியுள்ள இடம்' என்று பொருள் தரும். இன்றும் திருக்கோயிலைச் சுற்றியுள்ள இடத்தை மடவிளாகம் என்று அழைக்கின்ருேம். 'மடவிளாகம்' என்னும் அச் சொல்லுக்கும் அவ்விடத்திற்கும் என்ன தொடர்பு? நாம் சிந்தித்துப் பார்க்கவேண்டும். அக்காலத்தில் திருக்கோயிலைச்சுற்றி, கோயிலில் பணிசெய்யும் பணிப்பெண்கள் வசித்துவந்தனர். அவர்கள் தெய்விக ஆடல் பாடல்களில் தேர்ந்தவர்களாக இருந்ததோடன்றி இறைவ னுக்கு மலர்கொய்து மாலைதொடுத்துக்கொடுப்பதுபோன்ற பல பணி களையும் செய்துவந்தனர். அவர்கள் வசிக்கும் இடம் திருக்கோயிலைச்

சுற்றியிருந்தது. ஆகவே பெண்கள் (மடவார்) வசிக்கும் இடம் எனும் பொருளில் 'மடவார் விளாகம்' என்று வழங்கிப் பின் அச் சொல் 'மடவிளாகம்' எனச் சுருங்கி இருத்தல் வேண்டும் என்று கருத இடம் தருகிறது. எனவே பரவையார்போன்ற அப்பெண்கள் வாழ்ந்த இடத்திற்கு இப்பெயர் ஏற்பட்டுள்ளது எனலாம். ஸ்ரீவில்லி புத்தூருக்கு அருகில் மடவார் விளாகம் என்ற ஊரே இருப்பதும் இங்கு அறியத்தக்கதாகும். அவ்வகையில் இவ்வூர் அமரபுரீசுவரரை அமரர்கள் சூழ்ந்து வழிபட்ட இடமாகக் கொள்ளலாம்.

**அமரர் யார்?**

இக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் பெருமானின் திருப்பெயர் அமரபுரீசுவரர். அம்பாளின் திருப்பெயர் பெரியநாயகி. அமரர் களால் பூசித்துப் போற்றிய ஈசுவரர் இக்கோயிலிலுள்ள பெருமான். அமரர் எனும் சொல் தேவர்களைக் குறிக்கும். தேவர் எனும் சொல் இன்று நம்நாட்டில் மறவர் ஜாதியைக் குறிக்கும் பெயராக விளங்கு வதைக் காண்கின்றோம். 'மறவர்' எனும் பிரிவினருக்கு தேவர் என்ற பெயர் எங்ஙனம் ஏற்பட்டது என்பது சிந்தித்தற்கு உரியது. 'மறவன்' என்றால் வீரம் உடையவன் என்று பொருள். போர்க் களத்தில் போரிட்டு வீரசொர்க்கம் அடையும் வாழ்வு நெறியினைக் கைக் கொண்டவர்கள் ஆதலின் மறவர்களும் தேவர்கள் என அழைக் கப்பெறுகின்றனர். 'படையாட்சி' எனும் சொல்லும் வீரப் படையை ஆள்பவன் எனும் பொருளில் தான் தோன்றியிருத்தல் வேண்டும். அச்சொல் படையாச்சி என்று மருவி வழங்குகிறது. வன்னி-நெருப்பு. வன்னியைப் போன்ற சுடுசினம்மிக்க வீரர்களாயிருந்தமைபற்றியே படையாட்சியர்களை வன்னியர் எனவும் வழங்கி வருகின்றனர்.

**அமரர் போற்றிய ஆலயங்கள்:**

இக்கோயிலிலுள்ள பெருமானைத் தேவர்கள் வந்து வழிபட்டது போன்று பல திருத்தலங்களிலும் உள்ள பெருமானை அங்கங்கே தேவர்கள் பலரும் வந்து வழிபட்டனர் என்பது தெளிவு. சாயாவனம் எனும் சாய்க்காட்டில் தேவேந்திரன் வந்து பூஜை செய்து வழிபட் டான் என்று வரலாறு கூறுகிறது. இதுபோன்று திருக்கற்குடியில் எழுந்தருளியுள்ள பெருமானைத் தேவர்களும் மற்றவர்களும் பூசித்து வழிபட்டனர் என்று சுந்தரரின் திருப்பதிகம் கூறுகிறது.

" மறையோர் வானவரும் தொழுதேத்திவணங்க நின்ற
இறைவா எம்பெருமான் எனக்கின்னமுதாயவனே
கறையார் சோலைகள்சூழ் திருக்கற்குடி மன்னிநின்ற
அறவா அங்கணனே அடியேனையும் அஞ்சலென்னே "

என்பது அவர் பாடிய பாடல். இவைபோன்ற பல தலங்கள் தமிழகத்தில் இருக்கின்றன.

**மாலவன் விருப்பமும் மலரவன் ஆசையும் :**

மாணிக்கவாசகர் தாம்பாடியருளிய திருப்பள்ளி எழுச்சி எனும் பகுதியில் பெருமானைவழிபட்டு உய்யத் திருமாலும் நான்முகனும் எங்ஙனம் ஏங்குகின்றனர் என்பதனை ஒருபாடலில் தெளிவுறக்கூறுகின்றார். “திருப்பெருந்துறையில் உறையும் பெருமானே ! இந்தப்பூமி சிவன் உய்யக் கொள்கின்றவாற்றை எண்ணிப் புவனியில்போய்ப் பிறவாமையால் நாம் நாட்களை அவமே போக்குகின்றோம் என்று திருமாலும் நான்முகனும் இப்பூமியில் பிறந்து வழிபட விரும்புகின்றனர். விரும்புகின்ற அவர்களுக்கெல்லாம் அருள் செய்யாது நின் அலர்ந்த மெய்க் கருணையாம் தேவியுடன்நீ எளிய எம்மையும் ஆட்கொள்ள வருகின்றாய்! அங்ஙனம் இருந்தும் இப்பூமியில் பிறந்தோர் உன்னைப் பூசிக்கும் சிந்தனை இன்றி அவமே பொழுது போக்குகின்றனரே! என்று மணிவாசகர் சொல்லாமற்சொல்லி நமக்கு உணர்த்துகின்றார். இப்பாடலைத்தான் முதலில் குறிப்பிட்டோம்.

**சொர்க்க மத்திய பாதலம் :**

இங்ஙனம் பெருமான் இந்த உலகைக் காக்கின்றான் என்பதைத் திருமாலும் நான்முகனும் அறிந்தனர். அறிந்தவர்கள் நாமும்போய்ப் புவனியிற் பிறக்காமல் இருக்கின்றோமே என்று வருந்திப் பூமியில் பிறந்து பூசித்து உய்ய விரும்புகின்றனர். அவர்களே அப்படி விரும்புகின்றனர் என்றால் இப்பூமியில் பிறத்தல் எத்துணை நற்பேறு என்பதை நாம் நன்கு சிந்தித்தல்வேண்டும். இங்ஙனம் பூமியில்பிறந்தும் நாம் அவமே செய்தால் என்னபயன் ? இப்பூமியில் நல்வினையால் புண்ணியத்தையும், தீவினையால் பாவத்தையும் மக்கள் சம்பாதிக்கின்றனர். புண்ணியப்பயனாகிய இன்பத்தைத் தேவர்களாகி மேலுலகமாகிய சுவர்க்கத்தில் அனுபவிக்கின்றனர். பாவத்தின் பயனாகிய துன்பத்தைக் கீழுலகமாகிய நரகத்தில் (பாதலத்தில்) அனுபவிக்கின்றனர். எனவே இன்பத் துன்பங்களுக்கு விளைநிலமாக இருப்பது மத்தியில் உள்ள பூமியே. ஆதலால் இங்குதான் நன்மையும் தீமையும் செய்ய முடியும். சுவர்க்கமும் நரகமும்இன்பத்துன்பங்களை அனுபவிக்கும் இடங்களே. புண்ணியப் பயன் முடிந்தால் தேவர்களும், பாவப்பயன் முடிந்தால் நரகர்களும் திரும்பிவரும் இடம் மத்தியில் உள்ள பூமியேயாம். இதுபற்றியே திருமாலும் பிரமனும் பிறவா இன்பப் பெருநெறி பெற்றுய்யப் பூவுலகைக்கண்டு ஆசைப்படுகின்றனர் என்கிறார் மணிவாசகர்.

**கருணையே தேவி :**

பெருமான் தம் மெய்க்கருணையாகிய தேவியுடனே வந்துதான் அருள்பாலிக்கின்றார் என்பதனைச் சேக்கிழாரும் ஆனாயர் வரலாற்றில் அருளிச்செய்வதைக் காணலாம். அருள், கருணை என்பன ஒரு பொருட்சொற்கள். 'அருளது சத்தியாகும் அரன்றனக்கு' என்ற சித்தியார் வாக்கும் இங்கு நினைவு கூரத்தக்கது.

"ஆனாயர் குழலோசை கேட்டருளி அருட்கருணை
தானாய திருவுள்ளம் உடையதவ வல்லியுடன்
கானாதி காரணராம் கண்ணுதலார் விடையுகைத்து
வானாறு வந்தணைந்தார் மதிநாறும் சடைதாழ"

என்பது சேக்கிழார் பெருமான் திருவாக்கு,

பெருமான் அடியார்களுக்கு அருள்பாலிக்கும்போது தன்தேவியோடும், வருத்தும்போது தனித்தும் வருவதைப் பெரியபுராணத்தில் பல இடங்களிலும் அறிந்துகொள்ளலாம். அனுக்கிரகம் என்றால் கருணையாம் தேவியுடனும், நிக்கிரகம் என்றால் தனித்தும் பெருமான் வருவதை நாம் தெரிந்துகொள்ளல்வேண்டும்.

இதுபற்றியே பெருமான் அவனியில்புகுந்து நம்மை ஆட்கொள்ள வரும்போது அலர்ந்த மெய்க்கருணையாகிய தேவியுடன் வருகிறார் என்று அருளிச் செய்தார் மணிவாசகப்பெருமான்.

**சித்தியாரில் ஒரு சிந்தனை :**

இவைகள் எல்லாம் திருமுறை இலக்கியச் சிந்தனை என்று கூறலாம். சித்தாந்தசாத்திரம் எனும் வகையில் சித்தியார் எனும் நூல் ஒரு பாடலில் இக்கருத்தினையே மிகத் தெளிவாகக் கூறுகின்றது. 'இந்த மானுடப் பிறவிதானும் நமக்குக் கிடைத்தது, மனத்தாலும் வாக்காலும் உடம்பாலும் இறைவனுக்குத் தொண்டுசெய்ய அன்றோ! தேவர்கள் கூட இவ்வுலகில்வந்து அரன்தனை அர்ச்சித்து வழிபடுவர். ஆனால் இவ்வுலகில் ஊனுடம்பு கொண்டு வாழும் நம்மவர்கள் ஒன்றையும் உணராமல் இருக்கின்றார்களே! அந்தோ!' என்று சித்தியாரின் ஆசிரியர் அருணந்திசிவம் வருந்திப் பாடுகின்றார்.

"மானுடப் பிறவிதானும் வகுத்தது மனவாக்காயம்
ஆனிடத்(து) ஐந்தும் ஆடும் அரன்பணிக்காக அன்றோ
வானிடத் தவரும் மண்மேல் வந்தரன் தனை அர்ச்சிப்பர்
ஊனெடுத் துழலும் ஊமர் ஒன்றையும்உணரார் அந்தோ"

என்பது அவர் நொந்து பாடும் அருட்பாடல்.

அனைத்தையும் சிந்தித்துப்பார்க்கும்பொழுது, இவ்வுலகில் பிறப்பது பெரும்புண்ணியம் என்பதும் பிறந்தநாம் சிவபெருமானை எண்ணுவதும் வாழ்த்துவதும் வணங்குவதும் செய்து அதனுல் மனத்தூய்மையும், அறிவுத்தெளிவும், செயல்திறனும் பெற்று உய்யவேண்டும் என்பதும் தெளிவாகப் புலனுகும்.

அமரர்களும் போற்றும் இந்த அமரபுரீசுவரர் திருக்கோயிலில் இவ்வூரைச் சேர்ந்த இராமலிங்கம் பிள்ளை, ஆதிமூலம் பிள்ளை உள்ளிட்ட பல பெருமக்களும், பொதுமக்களும் பெரும்பங்குகொண்டு திருப்பணிகளை நன்கு நிறைவேற்றியுள்ளனர். இது பிற ஊர் மக்களுக்கும் எடுத்துக்காட்டாக இலங்குகின்றது. நாளையதினம் கும்பாபிஷேகம் மிகச் சிறப்பாக நடக்க உள்ளது. இவ்விழாவில் பங்கு கொண்ட பக்தர்களும் இவ்விழாவிற்குத் துணையாய் இருந்து பணிசெய்தோரும் எல்லா நலன்களும் பெற்று நீடுவாழச் செந்தமிழ்ச் சொக்கன் திருவருளைச் சிந்திக்கின்ருேம்.

விண்ணகம் விரும்ப மண்ணகம் வாழ்க.

---

# அன்னை அருள்மாலை

திருமுறைக்கலாநிதி

வேளூர், திரு. க. சொக்கலிங்க ஓதுவார்.

மயிலாடு சோலைசூ ழுந்திருத் தெங்கூரில்
மருவும் பெரியநாயகி
மையல்கொள் நெல்லிக்கா மங்கள நாயகி
மணமுறுநாட் டியத்தான்குடி
உயிராகு மலைமங்கை காருயில் என்றும்நாம்
உணருங் கயிலாயஅம்மை
ஊனமொன் றில்லாத கன்ருப்பூர் மாதுமை
உய்யஅருள் திருவலிவலம்
துயர்நீக்கும் மாழையொண் கன்னியே கைச்சினம்
தோகைவெள் வளையம்மையே
துணையாகும் கோளிலி வண்டமர் பூங்குழலி
தொழுவாய்மூர் அன்ன நடை
பயில்கின்ற மங்கைபா லினும்நன் மொழியம்மை
பண்ணிலுறு பெண்ணமுதமே
பஞ்சின்மெல் லடியிணையைத் தஞ்சம் அடைந்தென்றும்
பணிவேற்கருள் அன்னையே. (23)

# தொகைப்பாட்டு

தருமையாதீனப்புலவர்

டாக்டர். சொ. சிங்காரவேலன் எம். ஏ., பிஎச். டி.

### தொகைப்பாட்டுக்கள்

இலக்கியம் என்பது உண்மையை உள்ளபடியே சொல்லுவது அன்று; உண்மையுடன் உணர்வு நிலையில் தொடர்புபட்ட உணர்ச்சிப் பகுதியையும் இணைத்தே சொல்லுகின்றது. † ஆனால் வெறும் உண்மையை மட்டும் கூறக்கூடிய பாட்டுக்களும் இல்லாமல் இல்லை. வேறு உணர்ச்சி முதலிய இலக்கிய அழகுகள் ஏதும் இன்றிப் பாடப்படக் கூடிய நிலையில் சில பாட்டுக்களும் உள்ளன; எல்லா மொழிகளிலும் உள்ளன. ஆனால் நிலைத்து நிற்கும் தன்மை (Permanance)யை அத்தகைய சிலவகைப்பாட்டுக்கள். தாம்உணர்த்தும் உண்மையால் பெற்று விடுகின்றன. இலக்கியம் நிலைத்துநிற்கும் தன்மையை உடையதாக இருத்தல் வேண்டும் என்ற திறனாய்வுக் கொள்கைக்கு அவை எடுத்துக்காட்டாகிவிடுகின்றன. $ அவற்றுள் ஒருவகையாகிய தொகைப்பாட்டுப்பற்றி இக்கட்டுரை விளக்க முற்படுகிறது.

### தொகைப்பாட்டு அமைப்பும் பாகுபாடும் :

தொடர்புள்ள சிலவற்றை ஒன்றுக்கிக் கவிதை படைக்க முற்பட்டன சில கவிஞர் நெஞ்சங்கள். அத்தகைய பாவகையைத் 'தொகைப் பாட்டு' என்றே வழங்கலாம்; வழங்க வேண்டும். அது ஒரு புதிய பாவகை அன்று. பொருள் பற்றிய ஒரு பாகுபாட்டின் விளைவு; அவ்வளவே, அணிவகையில் 'ஒப்புமைக் கூட்ட அணி' என்ற பொருளணியைச் சேர்ந்த பாட்டே இத்தொகைப்பாட்டு. தமிழில்வழங்கும் நினைவுப் பேழைகளாகிய சில தொகைப்பாட்டுக்களை

---

† "Literature never attempts to state the fact nearly as fact, literature renders the fact plus its emotional effect, in some of its emotional relations" — Winchester. C, T., "Some Prniciples of Literary criticism"

$ "Literature must have some permanance" – Winchester. C. T.

எடுத்துக்காட்டாக இங்குக் கூறலாம். இவற்றைப் பாடியோர்களில் பெரும்பாலோர் பெயர்கள் தெரியவில்லை. யாரோ பொறுப்புணர்ச்சி உடைய புலவர் - பழைய செய்திகளைப் பாதுகாக்க வேண்டும் என்ற பண்புடைய பாவலராகவே இவர்கள் இருக்கவேண்டும். தம்முடைய பெயரைக்கூட இவர்கள் மறந்து, இலக்கியச் செய்திகளைத் 'தொகுத்துச்சுட்டும்' உத்திவகையில் தேர்ந்து நிற்கின்றார்கள். இவற்றைச் 'சமயம் சார்ந்தவை' என்றும், 'இலக்கியம் சார்ந்தவை' என்றும் இரண்டு வகையாக்கலாம்.

**முத்தித் தலங்கள் :**

தருமையாதீன முதற்குரவர், ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருளிய சிவபோகசாரம் முத்தித்தலங்களை முறைப்படுத்துகின்றது :

"தில்லைவனம், காசி, திருவாரூர், மாயூரம்.
முல்லைவனம், கூடல், முதுகுன்றம் — நெல்லை, களர்,
காஞ்சி, கழுக்குன்றம், மறைக்காடு, அருணை, காளத்தி,
வாஞ்சியமென் முத்தி வரும்,"

**பாண்டிநாட்டுத்தலங்கள் :**

பாண்டிநாட்டுத்தலங்கள் பதினான்கைப் பின்வரும் தொகைப் பாட்டு உணர்த்துகின்றது.

"கூடல், புனவாயில், குற்றாலம், ஆப்பனூர்,
ஏடகம், நெல்வேலி, இராமேசம் — ஆடானை,
தென்பரங்குன்றம், சுழியல், தென்திருப்புத்தூர், காளை
வன்கொடுங் குன்றம், பூவணம்,"

**அட்டவீரட்டங்கள் :**

சிவபிரானின் அட்ட வீரட்டத் தலங்களை நினைவுகொள்ளப் பின்வரும் அழகிய பாட்டு துணைபுரியும் :-

"பூமன் சிரம் கண்டி, அந்தகன்கோவல், புரம்அதிகை,
மாமன் பறியல், சலந்தரன் விற்குடி, மாவழுவூர்,
காமன் குறுக்கை, யமன்கடவூர். இந்தக் காசினியில்
தேமன்னு கொன்றையும் திங்களும் சூடிதன் சேவகமே."

**சப்தவிடங்கத்தலங்கள் :**

சப்தவிடங்கத்தலங்களை ஓர் அழகிய வெண்பாவாகப் பழம்புலவர் ஒருவர் பாடிய பாட்டொன்றைச் சிவநெறியாளர் அறிவர்; அது பின்வருவது :-

" சீரார் திருவாரூர், தென்னுகை, நள்ளாறு,
காரார் மறைக்காடு, காருயில் — பேரான
ஒத்த திருவாய்மூர், உவந்ததிருக் கோளிலி
சத்த விடங்கத் தலம். "

**சப்தத்தானங்கள் :**

சப்தத்தானத் தலங்களை இணைத்துப்பாடிய பாட்டொன்றும் அழகிய வெண்பாவாக உள்ளது. அது பின்வருமாறு :-

" நெய்த்தானம், பூந்துருத்தி, நேர்கண்டி, வேதிகுடி,
துய்த்தார்சேர் சோற்றுத்துறை பழனம் — மெய்த்தானம்
ஆனதிரு வையா றதனே டெழுதலங்கள்
மானதிரு மத்தன் மனை. "

**பஞ்சபூதத்தலங்கள் :**

பஞ்சபூதத் தலங்களைத் தொகைப்படுத்தும் பாட்டு அனைவரும் உணர்தற்குரிய ஒன்றே:

" அண்ணு மலையரையும் ஆரூர்த் தியாகரையும்
கண்ணுன காளத்தி நாதரையும் — ஒண்ணுன
சிற்றம் பலவரையும் தென்னுனைக் காவரையும்
நித்தம் பலகால் நினை. "

**முதல்தரப் பனுவல்கள் :**

தண்டமிழின் மேலாந்தரத்தன என்று ஒரு கவிஞர் தாம் படித்து நுகர்ந்த நூல்களைத் தொகைப்படுத்தியுள்ள திறம் ஓதி உணர்ந்து இன்புறத்தக்கது ;

" வள்ளுவர்நூல், அன்பர்மொழி, வாசகம், தொல்காப்பியமே
தெள்ளுபரி மேலழகன் செய்தவுரை, — ஒள்ளியசீர்த்
தொண்டர் புராணம், தொகுசித்தி ஓராறும்
தண்டமிழின் மேலாம் தரம். "

**ஒருவாசகப் பனுவல்கள் :**

ஒரேபொருளை உணர்த்தும் நூல்கள் இன்ன என்று யாரோ ஒரு கவிஞர் வரையறுத்த செய்தியைப் பின்வரும் அழகிய திருப்பாட்டுத் தொகைப்படுத்தியுள்ளது.

"தேவர்குறளும், திருநான் மறைமுடிவும்,
மூவர்தமிழும், முனிமொழியும், — கோவைத்
திருவாசகமும், திருமூலர் சொல்லும்
ஒருவாசகம் என்றுணர்."

**நால்வர் திறம் :**

சைவசமயகுரவர்கள் நால்வரின் வயதையும், இறைவன் திருவடிகளை அவர்கள் அடைந்த திருநாட்களையும் உணர்த்தும் தொகைப் பாட்டுக்கள் பின்வரும் வெண்பாவும், விருத்தமும் ஆகும் :

"அப்பருக் கெண்பத்தொன் றருள்வாத வூரர்க்குச்
செப்பிய நாலெட்டில் தெய்வீகம் — இப்புவியில்
சுந்தரர்க்கு மூவாறு, தொன்ஞான சம்பந்தர்க்(கு)
அந்தம் பதினாறு அறி."

"சித்திரைச் சதயம் அப்பர்; சிறந்த வைகாசி மூலம்
அத்தரைப் பணி சம்பந்தர்; ஆனிமா மகத்திலந்த
முத்தமிழ் வாதவூரர்; முதியநல் லாடிதன்னில்
சுத்தமாம் சோதிநாளில் சுந்தரர் கயிலைசேர்ந்தார்."

**அறுபத்துமூவர் திருப்பெயர்கள் :**

சைவசமயத்தில் குரு, இலிங்க, சங்கமபக்தி நெறிநின்று இறைபணிநின்ற அறுபத்துமூன்று நாயன்மார்களது திருப்பெயர்களையும், தொண்டுகளையும் தொகைப்படுத்திச் சுந்தரர் பாடிய தொகைப் பாட்டுக்கள்கொண்ட ஒரு பதிகமே 'திருத்தொண்டத்தொகை' ஆகும். 'தில்லைவாழந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்' என்று தில்லைக்கூத்தனே அடியெடுத்துக்கொடுத்துத் தொகைப்பாட்டிற்கு உறுதுணையாகநின்றான் என்பது பெரியபுராணத்தால் இனிது விளங்குவதாகும்.

**தில்லைக்கூத்தன் திருமுழுக்கு நாட்கள் :**

தில்லையில் ஆடும் ஆனந்தக்கூத்தனின் அபிடேக நாட்களைத் தொகைப்பாட்டொன்று தொகுத்துக்காட்டியுள்ளது.

"சித்திரையில் ஓணமுதல் சீரானி உத்திரமாம்
சத்ததனு வாதிரையும் சார்வாகும் — பத்திவளர்
மாசியரி கன்னி மருவு சதுர்த்தசி மன்று
ஈசர் அபி டேகதின மாம்."

**மெய்கண்டசாத்திரங்கள் :**

சைவசித்தாந்த சாத்திரங்கள் பதினுன்கினை நினைவுகொள்ளத் தக்க அழகிய வெண்பா அனைவரும் அறிந்ததே!

"உந்தி களிறு உயர்போதம் சித்தியார்
பிந்திருபா உண்மை பிரகாசம் — வந்தவருட்
பண்புவினு போற்றிகொடி பாசமிலா நெஞ்சுவிடு
உண்மைநெறி சங்கற்பம் உற்று."

**அருளாளர் தனித்தன்மை :**

தேர்ந்த திறனுய்வாளராக விளங்கிய ஒருவரால் பாடப்பட்ட அழகிய ஒரு வெண்பா, அருளாளர்களின் திருப்பாட்டிற்குரிய தனித் தன்மையைப் பின்வருமாறு எழில்பெற எடுத்துரைக்கின்றது:

"வாக்கிற்கு அருணகிரி, வாதவூரர் கனிவில்
தாக்கிற் றிருஞான சம்பந்தர் — நோக்கிற்கு
நக்கீரர் தூய நயத்திற்குச் சுந்தரனுர்
சொற்குறுதிக் கப்பரெனச் சொல்."

(தொடரும்)


# ஸ்ரீ குமரகுருபரர்

தருமையாதீனத்து முனிபுங்கவரும், திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்தின்முதல்வருமான ஸ்ரீ குமரகுருபரசுவாமிகளின் திருப் பெயர் கொண்டு, சமயம், இலக்கியம், அறம் முதலியவற்றை எளியநடையில் தெளியச்செய்யும் ஆராய்ச்சிக்கட்டுரைகளுடன் திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடம் ஸ்ரீமத் காசிவாசி சுவாமிகள் அவர் களது ஆணையின் வண்ணம் மாத இதழாக வெளிவருகிறது.

| | | | |
|---|---|---|---|
| ஆயுட் சந்தா | (உள்நாடு) | ரூ. | 100 — 00 |
| | (வெளிநாடு) | ரூ. | 125 — 00 |
| ஆண்டுச்சந்தா | (உள்நாடு) | ரூ. | 7 — 50 |
| | (ஸ்ரீலங்கா) | ரூ. | 10 — 00 |
| | (வெளிநாடு) | ரூ. | 12 — 00 |

நிர்வாக ஆசிரியர்: "ஸ்ரீகுமரகுருபரர்"
ஸ்ரீ காசி மடம் : திருப்பனந்தாள்.
தஞ்சை மாவட்டம். 612 504.

# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

## (மாதப் பத்திரிகை)

★ தற்கால மக்களின் ஆன்மிக மறுமலர்ச்சிக்கு ஏற்றவகையில் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர், சுவாமி விவேகானந்தர் ஆகியோரின் குரலாக இந்தப் பத்திரிகை விளங்குகிறது.

★ மகான்களின் வாழ்க்கையில் நடைபெற்ற படிப்பினை தரக்கூடிய நிகழ்ச்சிகள், நடைமுறை வாழ்க்கையில் மதத்தைக்கைக்கொள்ள வேண்டிய வழி முறைகள், சாஸ்திரங்களின் உட்பொருள் விளக்கங்கள், ஆத்ம தத்துவம் குறித்த ஆராய்ச்சி, அருள்நெறிக் கதைகள், வேதாந்தம், பக்தி, உபநிஷத உண்மைகள், சைவம், வைணவம் ஆகிய அரிய கருத்துக்களைக் கொண்டது.

★ உங்கள் உள்ளம் உயர நீங்கள் அவசியம் படிக்கவேண்டிய பத்திரிகை இது.

| சந்தா விவரம் | | | |
|---|---|---|---|
| | வருட சந்தா | ரூ | 10 |
| | டெபாசிட் சந்தா | ரூ. | 125 |
| | தனிப்பிரதி | ரூ. | 1. |

விவரங்களுக்கும் இலவச மாதிரிப்பிரதிக்கும் பின்வரும் முகவரிக்குத் தொடர்பு கொள்ளலாம்.

ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம் காரியலாயம்'
ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்,
மயிலாப்பூர் :: சென்னை—600004.


---

## கிரகங்களின் சேர்க்கை

ஆவணிமீ 6உ (22—8—79) புதன்கிழமை இரவுமணி 10-31 முதல், 8உ (24—8—79) வெள்ளிக்கிழமை இரவு மணி 12-10 வரை சுக்கிரன், குரு, சூரியன், சனி, இராகு, சந்திரன் என்ற ஆறு கிரகங்களும் சேர்ந்து நிற்கின்றன. அன்று இரவு மணி 12-10 க்குமேல் சந்திரன் நீங்க ஐந்து கிரகங்களாகநின்று மீண்டும் 9உ (25—8—79) சனிக்கிழமை இரவு மணி 12-10 க்கு புதன்வந்துகூட ஆறு கிரகங்களும் 26உ (11—9—79) செவ்வாய்க்கிழமை இரவு மணி 10-50 வரை ஒன்றுசேர்ந்துநிற்கின்றன. ஆறு கிரகங்கள் ஒன்றுகூடினால் ராஜபயம் என்று காலவிதானம் என்னும் சோதிடநூல் கூறுகிறது. ஆதலால் அந்நாட்களில் ஆலயங்களில் விசேஷ அபிஷேக ஆராதனைகள் செய்வித்தலும், கோளறு திருப்பதிகம், ஸ்ரீ தட்சிணாமூர்த்தி திருவருட்பா இவைகளை ஓதுதலும் நலம்தரும்.

உ

சிவமயம்

## திருமயிலாடுதுறை, திருவிளநகர்

## திருக்கோயில்களில்

# ஆயில்யத்திருநாள் ஆலய வழிபாடு

தருமையாதீனம் இருபத்தாருவது குருமகாசந்நிதானம் **ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்** தமது குருமூர்த்திகள் காட்டியருளியவழியிலேயே தமது ஜன்ம நட்சத்திரமாகிய **ஆயில்யத் திருநாளில்** பாடல்பெற்ற தலங்கள் தோறும் முறையானவழிபாட்டிற்கு வழிகாட்டிவருகின்றூர்கள். காவிரித் தென்கரைத் தலங்களில் ஆயில்யத் திருநாள் வழிபாடு நடைபெற்று வருகிறது. உழவாரப்பணி, விசேட அபிடேக ஆராதனைகள், தலத் திருப்பதிகங்களை அச்சிட்டு ஓதி வழங்கல், சமயப்பிரசாரம் முதலியன ஆயில்யத்திருநாள் வழிபாட்டின் அங்கங்களாம்.

**நிகழும் சித்தார்த்தி ஆண்டு ஆவணித்திங்கள் 6 - ஆம் நாள் (22—8—79) புதன்கிழமை காலை 10 மணி அளவில் திருவிளநகர் அருள்மிகு துறைகாட்டும்வள்ளலார் ஆலயத்திலும், [மாலை 6 மணி அளவில் மயிலாடுதுறை அருள்மிகு மாயூரநாதர் ஆலயத்திலும்** விசேஷ அபிஷேக ஆராதனைகளுடன் ஆயில்யத்திருநாள் சிறப்பு வழிபாடுகள் நடைபெறும்.

அன்பர்கள் அனைவரும் வருக !

வழிபட்டு உய்க ! அரன் அருள் பெறுக.

---

குறிப்பு :— காலை 8 மணி அளவில் தொடங்கி அன்பர்கள் பலரும் உழவாரத் திருப்பணிபுரிவர். அன்பர்கள் வழிபாட்டிற்கு உரிய பால் இளநீர் முதலிய அபிஷேகத் திரவியங்கள் கொண்டு வரலாம்.

( அட்டை 3 ஆம் பக்கத் தொடர்ச்சி )

14—9—79 வெள்ளி, மாயூரம் - குமரக்கட்டளை ஸ்ரீ சுப்பிரமணியசுவாமி சம்வத்ஸராபிஷேகம். தருமையாதீனம் 14 ஆவது குருமகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ கந்தப்ப தேசிக பரமாசாரிய சுவாமிகள் குருபூஜை.

16—9—79 ஞாயிறு, திருநள்ளாறு ஸ்ரீ தர்ப்பாரண்யேசுவரசுவாமி சம்வத்ஸராபிஷேகம். தருமையாதீனம் 13 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ ஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள் குருபூஜை.

# திருத்துருத்தி (குத்தாலம்)
# திருவழுந்தூர் தலச் சிறப்புக்கள்

தருமையாதீனத் தமிழ்ப்புலவர்,

**வித்துவான். திரு. வி. சா. குருசாமி தேசிகர் எம். ஏ.**

சோழவளநாட்டில் தஞ்சை மாவட்டத்தில் மாயூரம் வட்டத்தில் காவிரியின் தென்கரையில் விளங்குவன திருத்துருத்தி, திருவழுந்தூர் ஆகிய தலங்கள். திருத்துருத்தி குத்தாலம் எனவும் திருவழுந்தூர் தேரழுந்தூர், எனவும் வழங்கப்படுகின்றன. இவை தேவாரப்பாடல் பெற்ற காவிரித்தென்கரைத்தலங்களுள் 37, 38 வது தலங்களாக உள்ளன.

## 1. திருத்துருத்தி.

தஞ்சை மாவட்டத்தில் துருத்தி என்ற பெயருடைய தலங்கள் இரண்டு. ஒன்று திருத்துருத்தி, பிறிதொன்று திருப்பூந்துருத்தி. மாயூரமிருந்து கும்பகோணம் செல்லும் வழியில் குத்தாலம் என்ற பெயருடன் புகைவண்டி நிலையமாக விளங்குகிறது இத்தலம். இதனை அடைதற்கு மாயூரத்திலிருந்தும் கும்பகோணத்திலிருந்தும், பந்தணை நல்லூரிலிருந்தும் பேருந்து வசதிகள் நிரம்ப உள்ளன.

**தலப்பெயர் :-** துருத்தி என்பதற்கு ஆற்றிடைக்குறை என்பது பொருள். குத்தாலம் காவிரியாற்றிடைக்குறையில் அமைந்து விளங்கியதால் துருத்தி எனப்பட்டது. ‘பொன்னியின் நடுவுதன்னுள் பூம்புனல் பொலிந்து தோன்றும் துன்னிய துருத்தியானை’ எனவரும் இத்தலத் தேவாரத் தொடராலும் இதனை அறியலாம். முன்பு இரு புறங்களிலும் சென்ற காவிரி தற்போது ஆலயத்திற்கு வடபால் ஓடுகிறது, துருத்தி என்ற பெயர் இப்போது வழக்கில் இல்லை. உத்தால மரத்தைத் தல மரமாகக் கொண்டுள்ள காரணத்தால் இத்தலம் உத்தாலவனம் எனப்பெற்று அப்பெயர் மருவி, குத்தாலம் என வழங்கப்படுகிறது. உத்தாலம் - ஒருவகை ஆத்திமரம். நெல்லை மாவட்டத்தில் உள்ள குற்றாலம்வேறு. இத்தலம் வேறு.

**கோயிலமைப்பு :-** கோயில் அண்மையில் நடைபெற்ற கும்பாபிஷேகப் பொலிவோடு ஊரின் நடுவே மேற்கு நோக்கி அமைந்துள்ளது

இரண்டு பிராகாரங்கள் உள்ளன. ஐந்து நிலைகளுடன் விளங்கும் இராஜகோபுரத்தை அடுத்துள்ளது முதற்பிராகாரம். இப்பிராகாரத்தில் வசந்த மண்டபமும் அதை அடுத்து அம்பாள் கோயிலும் எதிரே உத்தாலமரமும் உள்ளன. இப்பிராகாரத்தை வலம்வரும்போது முதலில் சுந்தரருக்கு உடற்பிணி போக்கிய தீர்த்தத்தையும் தீர்த்தக் கரையில் சுந்தரர் திருக்கோயிலையும் காணலாம். கிழக்குப் பிராகாரத்தில் யாகசாலையும் ஈசானலிங்கம் அமைந்தகோயிலும் உள்ளன. தெற்குப்பிராகாரத்தில் நெற் களஞ்சியம் உள்ளது. அடுத்து துணை வந்தவிநாயகர் கோயில் உள்ளது. அடுத்து இத்தலத்திற்குத் தனிச் சிறப்புத்தரும் தலமரம் உள்ளது. அம்மரத்தடியில் இறைவன் இத் தலத்திற்கு எழுந்தருளிய பாதுகை உள்ளது.

கொடிமரம் நந்தி பலிபீடங்களைக்கடந்து இரண்டாம் பிராகாரத்தை அடைந்தவுடன் அழகிய மகாமண்டபம் திகழ்கிறது. நடராசர் எழுந்தருளி விளங்கும் இம்மண்டபத்தை வழிபட்டு வலம் வரத்தொடங்கலாம். முதலில் விநாயகர் முருகன் நடராசரை வழிபட்டு வடக்குப்பிராகாரத்தை அடைவோம். சுவாமிகோயில்கோஷ்டங்களில் இடபாரூடர், துர்க்கை, பிக்ஷாடனர், பிர்மா திருவுருவங்கள் உள்ளன. கிழக்குப் பிராகாரத்தில் சனிபகவான் பைரவர் சூரியன் விளங்குகின்றனர் அழகிய ஆறுமுகப்பெருமான் கோயில் தனிக்கோயிலாக உள்ளது. கோஷ்டத்தில் திருமால் பிரமர் உருவங்களோடு இலிங்கோற்பவர் விளங்குகிறார். தெற்குப்பிராகாரத்தில் பரிமளசுகந்தநாயகி அம்பாள் கோயில்உள்ளது. கோஷ்டங்களில் தக்ஷிணாமூர்த்தி, நடராசர், விநாயகர், அகத்தியர் திருவுருவங்கள் உள்ளன. அறுபத்துமூவர் அடுத்து நால்வர் சந்நிதிகள் உள்ளன. வலம்வந்து சுவாமிகோயிலுக்குள் விளங்கும் அர்த்தமண்டபத்தை அடையலாம்.

சுவாமி சந்நிதி மிக்க பொலிவோடு திகழ்கிறது. சந்நிதியில் துவாரபாலகர் விநாயகர் விளங்குகின்றனர். அம்பாள் கோயில், வெளிப்பிராகாரத்தில் தெற்கு நோக்கித் திகழ்கிறது. தனிப்பிராகாரம் உள்ளது,

**மூர்த்திகள் :-** சுவாமி திருப்பெயர் அருள்மிகு உக்தவேதேசுவரர். தமிழில் சொன்னவாறறிவார் எனத் தேவாரத்தில் குறிக்கப் படுகிறார். வீங்குநீர்துருத்தி உடையார், கற்றளி மகாதேவர் எனக்கல் வெட்டுக்களில் பெயர்கள் வழங்கப்படுகின்றன. அம்பாள் திருப்பெயர், அருள்மிகு மிருது முகிழாம்பிகை எனவும் அரும்பன்ன வனமுலையாள் எனவும் வழங்கப்பெறுகிறது. தல விநாயகர் துணைவந்த பிள்ளையார். மற்றும் மணவாளநாதர், நறுஞ்சாந்திளமுலையம்மையார் ஆகிய பல மூர்த்திகளும் உள்ளனர்.

தலமரம் - உத்தாலமரம். தீர்த்தம் - (பதுமதீர்த்தம்) வடகுளம், சுந்தரதீர்த்தம், காவிரி முதலியன.

சொன்னவாறு அறிவார் - இத்தலத்தில் தம்மைப் பூசித்த அம்மையின் கரங்களை இறைவன் பற்றியபோது அம்மையார் தாய் தந்தையர் மனம் மகிழ அடியேனை மணம்புரிந்துகொள்ள வேண்டு மென்று கேட்டுக் கொண்டார். இறைவனும் நாமே விதித்த விதி முறையை நாமே மேற்கொள்ள வேண்டுமென்றுகூறி, பெற்றோர்களின் உடன்பாடு பெற்று அம்மையை இத்தலத்தில் மணம் புரிந்து கொண் டார் ஆதலின் சொன்னவாறு அறிவார் எனப்பெற்ருர்.

இறைவன் மணவாளகோலத்தோடு இத்தலத்திற்கு எழுந்தருளிய போது துணைவந்த விநாயகர் அப்பெயரால் வழங்கப்படுகிருர் குடை யாக வந்த உத்தாலமரம் தலமரமாகவுள்ளது இறைவன் எழுந்தருளிய போது வேதங்கள் பாதுகைகளாக வந்தன. அவை தல மரத்தின் அடியில் உள்ளன.

**தலப்பெருமை :-** உமையம்மையார் சிவபெருமானை வழிபட்டுத் திருமணம் செய்துகொண்டது. அக்கினி தன்பழிதீர வழிபட்டது. விக்கிரமசோழன் மனைவி கோமளை என்பாளின் குட்டநோய்தீர்த்தது. வருணனின் சலோதரம் நீக்கியது. காளி, சூரியன், காமன் காசிபர் முதலிய ஏழு முனிவர்கள் ஆகியோர் வழிபட்டது. சிவபக்தனின் காசநோயைப் போக்கியது ஆகிய பல பெருமைகளை உடையது.

கதிரவன் வழிபட்டு அருள்பெற்ற கார்த்திகை ஞாயிறு அன்று வழிபடுவோர் இன்றும் பல்வகை நன்மைகளையும் பெற்றுவருகின்றனர்.

## புராண வரலாறு

**அம்மையார் திருமணம் :-** திருக்கயிலையில் அம்மையார் இறை வனை நோக்கித் தம்மை மீண்டும் ஒருமுறை திருமணம் புரியுமாறு வேண்டினுள். இறைவன் அடுத்த கற்பத்தில் செய்வோம் என்ருர். அம்மை வருத்தமுற்றுத் தோழியரோடு விளையாடச் சென்ருள். இறைவன் சினந்து அம்மையைப் பசுவாகுமாறு சபித்தார். அம்மை பொறுத்தருளுமாறு வேண்டினுள். இறைவன் சினம் தணிந்து தாமும் விடையாக உடன் வருவோம் என்றருளினுர். இச்சாபம் தீரும் காலம் எது என்ருள் அன்னை. இறைவன் 'உன் காற்குளம்பு என்மீது படும் போது சாபம்நீங்கும் ; நீ பரத முனிவரின் வேள்விக்குண்டத்தில் ஒரு பெண்ணுகத் தோன்றுவாய் ; அங்குவந்து யாம் உன்னை மணம்புரிந்து கொள்வோம்' என்ருர். அதன்படி, பரத முனிவரின் வேள் விக் குண்டத்தின் ஓமத்தீயில் அம்பிகை தோன்றினுள்.

காவிரிக்கரையில் விளங்கும் இத்தலத்திறைவனை வழிபட்டாள். இறைவன் வெளிப்பட்டு அம்மைக்கு அருள்புரிந்தார். நந்தியெம்

பெருமான் வாயிலாகத் திருமணம் செய்துகொள்ள வருதலைப் பரத முனிவர்க்கு அறிவித்து மணவாள கோலத்தோடு இத்தலத்திற்கு எழுந்தருளி அம்மையை மணம்புரிந்து மகிழ்ந்தருளினர்,

**உருத்திரசன்மன் :-** காசியைநோக்கிச்சென்ற இம்மறையவனை இறைவன் வழிமறித்துத் திருத்துருத்திக்கு அழைத்துக்காசியை விடச் சிறந்த இத்தலத்தில் எம்மை வழிபடுக என்று அருள்செய்தார்.

**சுந்தரர் :-** திருவொற்றியூரில் நின்னைப் பிரியேன் எனச் சபதம் செய்து சங்கிலியாரை மணந்த சுந்தரர் சபதம் பிழைத்துத் திருவாரூர் செல்ல முற்பட்ட காரணத்தினல் இருகண்களையும் இழந்தார். திருவெண்பாக்கம் அடைந்து ஊன்றுகோல்பெற்றர். காஞ்சிபுரத்தில் இடக்கண் பெற்றர். ஆவடுதுறையை அடையும்போது சபதம் பிழைத்த காரணத்தினல் மேனி கருநிறம் அடைந்தது, இறைவனை வேண்டினர். இத்திருத்தலத்தை அடைந்து கோயிலில் உள்ள பதும தீர்த்தத்தில் நீராடினர். உடற்பிணி அகன்றது. மணியொளிசேர் திருமேனியர் ஆயினர். 'மின்னுமாமேகங்கள்' எனத் தொடங்கிப் பதிகம் பாடி வழிபட்டார். இதனைத் தமது பதிகத்தில் சுந்தரர் 'என் உடம்பு அடும்பிணி இடர்கெடுத்தானை' எனக் குறிப்பிட்டுள்ளார்.

**சூரியன் :-** வித்துவன்மாலி என்பவன் இறைவனை வழிபட்டுச் சூரியனுக்கும் வரம்பெற்றன். சூரியன் தனக்குப் போட்டியாக வந்துள்ள வித்துவன் மாலியோடு போரிட்டான். இறைவன் சூரியனைச் சினந்தார். சூரியன் சிவபெருமானின் சினம்தணியவும் இழந்த தன் பதவி நிலைக்கவும் இத்தலத்திற்கு வந்து சிவபிரானை வழிபட்டான். கார்த்திகைஞாயிறு அன்று இறைவனருள் கதிரவனுக்குக் கிடைத்தது கதிரவன் தங்கியிருந்ததலம் கதிராமங்கலம் எனப்பட்டது. கார்த்திகை ஞாயிறு அன்று இத்தலத்தில் காவிரியில் நீராடி வழிபடுவோர் சகல செல்வங்களும் பெறவேண்டுமென்று சூரியன் கேட்ட வரத்தையும் இறைவன் வழங்கினர்.

**வழிபட்டோர் :-** உமையம்மையார், அக்னி, வருணன், காளி, காமன், காசிபன், ஆங்கீரசன், கௌதமன், வசிட்டன், மார்க்கண்டன், புலத்தியன், அகத்தியன், சிவபக்தன், வித்துவன்மாலி, கதிரவன், உருத்திரசன்மன், பரதன், புண்டரீகன், ககோளமுனிவன், புலகன், குச்சன், விக்ரமன், சுந்தரர், சதானந்தர், வச்சன், சோமசேகரன், தருமசன்மர், சுமதி. சௌதரிசன முனிவர் முதலியோர் இங்கு வழிபட்டு நற்பேறுகள் பலவும் பெற்றுள்ளனர்.

**சிறப்புத் திருவிழா :-** நாடோறும் ஐந்துகால பூசைகள் நடைபெறுகின்றன. கார்த்திகைஞாயிறு இத்தலத்திற்குச் சிறப்புநாள்.

இறைவன் உலாவந்து காவிரியில் தீர்த்தம் கொடுத்தருளுவார். அன்பர்கள் பலரும் காவிரியில் நீராடி இறைவனை வழிபட்டு மகிழ்வர்.

**இலக்கியம் :-** திருஞானசம்பந்தர் அருளிய திருப்பதிகம் ஒன்றும், திருநாவுக்கரசர் அருளிய திருப்பதிகம் ஒன்றும், சுந்தரர் அருளிய திருப்பதிகம் ஒன்றும் ஆக மூன்று திருப்பதிகங்கள் உள்ளன. மணிவாசகர் " உருத்தெரியாக்காலத்தே " என்ற திருப்பாடலில் இத்தலத்தைக் குறிப்பிட்டுப் பாடியுள்ளார். ஐயடிகள்காடவர்கோன், நம்பியாண்டார் நம்பிகள், சேக்கிழார் ஆகியோர் இத்தலத்தைக் குறிப்பிட்டுப் பாடியுள்ளனர். மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் பாடிய தலபுராணம் அச்சிடப்பெற்றுள்ளது.

**கல்வெட்டு :-** சோழர் விஜயநகரத்தார் கல்வெட்டுக்கள் இருக்கின்றன. அவைகளின் நோக்கங்கள் :— இறையிலியாக நிலங்கள் விட்டது, விளக்கு வாங்கப்பட்டது. வரிவசூல் உரிமை கோயிலுக்குக் கொடுக்கப்பட்டது முதலியவை. " வீங்குநீர்த் திருத்துருத்தி " என்று இத்தலம் கூறப்பட்டுள்ளது. கல்யாணாலயம் என்றும் சொல்லப் படுகிறது.

ராஜேந்திரசோழன் ஐந்தாம் ஆண்டில் திருவழுந்தூர் நாட்டு வீங்குநீர்த்திருத்துருத்தி சொன்னவாறறிவார் கோயிலில் அரசனுடைய படைகளுக்கு வெற்றி தருவதற்காக, சைவ அன்பர்களுக்கு உணவளிக்கப் பணம் தரப்பட்டது. விக்கிரமதேவன் 6-ஆம் ஆண்டில் (19—8—1123) ஒரு கல்வெட்டு எழுதப்பட்டது. மகாராசா வேண்டியபடி கிருஷ்ணதேவராயர் சொன்னவாறறிவார் கோயிலுக்கு 90 பொன் வரக்கூடிய வரிகளைத் தந்தார். அது மாமாங்கத்தின் போது அளிக்கப்பட்டது. இராசேந்திரசோழன் 15-ஆம் ஆண்டில் ஒரு மடம் கட்ட நிலம்விற்கப்பட்டது.

## 2. திருவழுந்தூர்

இத்தலம் தேரழுந்தூர் என வழங்கப்படுகிறது. குத்தாலத்திற்கு அண்மையில் உள்ளது. மாயூரம் கும்பகோணம் இருப்புப்பாதையில் தேரழுந்தூர் புகைவண்டி நிலையத்திலிருந்து தெற்கே மூன்று கிலோ மீட்டர் தூரத்தில் கோயில் உள்ளது. மாயூரத்திலிருந்தும் குத்தாலத்திலிருந்தும் ஊருக்குள் செல்லப் பேருந்து வசதிகள் உள்ளன.

**தலப்பெருமை :-** கவிச்சக்ரவர்த்தி கம்பர் பிறந்த ஊர். அவர் வாழ்ந்த மாளிகை இருந்த இடம் கம்பர்மேடு என்று வழங்கப் படுகிறது. இந்த இடம், தொல்பொருள் ஆராய்ச்சித்துறையினரின் கண்காணிப்பில் உள்ளது.

அகத்திய முனிவர் கீழே இறைவரைப் பூசித்திருந்ததை அறியாது ஊர்த்துவரதன் என்னும் அரசன் வானவெளியில் செலுத்திய தேர் செல்லாது அழுந்திய காரணத்தால் இத்தலம் தேர்அழுந்தூர் எனப் பட்டது. அழுந்தூர் அழுந்தை என மரூஉமொழியாகவும் வழங்கப் பெறும்.

**மூர்த்திகள் :-** இறைவரின் திருப்பெயர் அருள்மிகு வேத புரீசுவரர். இறைவியாரின் திருப்பெயர் அருள்மிகு சௌந்தராம்பிகை. தலமரம் - வில்வம். தீர்த்தம் - வேததீர்த்தம். இது சந்நிதிக்குத் தென்பால் உள்ளது.

**புராண வரலாறு :-** வேதங்கள் தேவர்கள் திக்குப்பாலகர்கள் முனிவர்கள் பூசித்துப் பேறுகள் பெற்றுள்ளனர். திருஞானசம்பந்தர் அருளிய ஒரே திருப்பதிகத்தைப்பெற்றது.

**கல்வெட்டுக்கள் :-** இத்திருக்கோயிலில் ஆறு கல்வெட்டுக்கள் இருக்கின்றன. இவையனைத்தும் மூன்றாங்குலோத்துங்க சோழன் காலத்தனவாகும். இவைகளில் இம்மன்னன் 'திரிபுவன சக்கிர வர்த்திகள் மதுரையும், ஈழமும், கருவூரும் பாண்டியன் முடித்தலையுங் கொண்டு வீராபிஷேகமும் விஜயாபிஷேகமும் பண்ணியருளின திரி புவன வீரதேவன் எனவும், மதுரையும், கருவூரும், ஈழமும் பாண்டி யன் முடித்தலையுங்கொண்டருளிய ஸ்ரீ சோழ கேரளதேவன் எனவும் போற்றப்பட்டுள்ளான்.

இவ்வூரைத் தன்னகத்துக் கொண்டுள்ள நாடு ஜெயங்கொண்ட சோழவளநாட்டுத் திருவழுந்தூர் நாட்டுத் திருவழுந்தூர் என்று குறிக்கப்பெற்றுள்ளது. சிவபெருமானின் திருப்பெயர் திருவழுந்தூர் உடையார் திருமடமுடைய நாயனார் என்பதாகும்.

இக்கல்வெட்டுக்கள் திருமடமுடைய நாயனார்க்குக் காவிரி ஆற்றினின்று நித்தம் திருமஞ்சனம் கொண்டுவந்து திருமஞ்சனசாலை யில் ஒடுக்கித் திருமஞ்சனம் பண்ணுவிக்கக்கடவதற்கு நிவந்தங்கள் அளித்த செய்திகளைப் புலப்படுத்துகின்றன.



# மூலன் மரபில்வரு மௌனகுரு

புலவர். திரு. மு. வைத்தியநாதன்

**தாயுமானவர் :**

எவ்வுயிரையும் தன்னுயிர்போல் எண்ணிய தபோதனர்களில் ஒருவர் **தாயுமானவர்**. அவர் சைவஞ்சார்ந்த பொதுமைநெறியாளர்; தென்தமிழ் மொழியிலும் வடமொழியிலும் வல்லார்; மூவர் முதலிய அருளாளர்களின் அருட்பனுவல்களை முழுதுணர்ந்த புலமையாளர்; ஆன்மவியலைத் தெள்ளிதின் விளக்கிய அருட்கவிஞர்; கல்வி கேள்வி அறிவு ஒழுக்கங்களால் நாயக்க மன்னரின் அரண்மனையில் அமைச்சராக விளங்கியவர்; பிறர் நலம் பேணும் சான்றோராகத்திகழ்ந்தவர்.

பதினெட்டாம் நூற்றாண்டில் கீழ்க்கடற்கரையில் வந்திறங்கிய போர்த்துக்கீசியர்களை இராமநாதபுரம் சேதுபதியின் உதவியுடன் முப்பதாயிரம் வீரர்களுடன் எதிர்த்துநின்றுவென்று உரிமைப்போரிற்கு வித்திட்ட பெரும்படைவீரர்; இவைகட்கெல்லாம்மேலாக ஞானயோக நிலையில் தலைமைசான்றவராக விளங்கிய ஆன்மஞானவீரர்; இத்தகைய அருளாளரின் அருட்குரவர்தான் ஸ்ரீ **மௌனகுரு.**

**ஸ்ரீ மௌனகுருநாதர் :**

திருச்சிராப்பள்ளி மலைக்கோட்டைத் திருவாயிலின் அண்மையில் திகழ்வது ஸ்ரீ **சாரமாமுனிவர் மடம்**. இம்மடத்து அதிபர்கள் மூலன் மரபிலே வந்தவர்கள். 'மூலன் மரபில்வரு மௌன குருவே' என்னும் தொடரால் இதனை அறியலாம். மூலன் மரபு என்பது திருமூலர் மரபு என்றும், எவற்றிற்கும் மூலமாகிய தென்முகத்தெய்வ மரபு என்றும் விளக்கப்படும். தாயுமானவர் தாம் பாடிய எந்நாட்கண்ணியில் குருவணக்கம் கூறும் பகுதியில் மெய்கண்டார் முதலிய சந்தான குரவர்களையும், பின்னர் மௌனகுருவையும் புகழ்ந்து பாடியுள்ளார். அப்பகுதியில் திருமூலரைக் குருபரம்பரையுட் கூறுமையால், மூலன் என்ற சொல் இறைவனைக் குறிப்பதாகவே கொள்ளலாம்.

ஸ்ரீ **சாரமாமுனிவர்** என்பவர் அம்மூலன்மரபில் வந்தவர்களில் ஒருவர். அவர்பெயரால் விளங்கிய மடம், பிற்காலத்தில் ஸ்ரீ மௌன மடம் என்று அழைக்கப்பெற்றதுடன் கி.பி. 1685ஆம் ஆண்டளவில் தருமபுர ஆதீனப் பொறுப்பின்கீழ் வந்துள்ளமையை அம்மடத்து ஆதிப்பட்டயங்களால் அறியலாம். இச்சாரமாமுனிவர் தொடங்கி

அம்மடத்தில் அருளாட்சி செய்துவந்தவர்களில் 17 ஆவது பட்டத்தில் இருந்தவர்தான் ஸ்ரீ மௌனகுரு என்பவர். இவரை **ஸ்ரீமௌனத் தம்பிரான் சுவாமிகள்** என்று போற்றுவர். இவரின் தீட்சைப்பெயர், ஸ்ரீமத் சிதம்பரநாதத் தம்பிரான் சுவாமிகள் ஆகும். இவரே தாயுமானவரின் பக்குவநிலை அறிந்து, அவருக்குச் சட்சு தீட்சையும் பரிச தீட்சையும் புரிந்து, திருக்கண்சாத்தி. தம் திருக்கையில் வைத்திருந்த சிவஞானசித்தியார் எட்டாம் நூற்பாவின் முப்பதாம் திருப்பாடலின் மூற்பாதியை விளக்கி, உண்மைப்பொருள் உணர்த்தி, ஞானயோக முறைகளை அறிவித்து ஆட்கொண்டவர்.

**மௌனம் - ஒரு விளக்கம் :**

**'மோனம் என்பது ஞான வரம்பு'** என்பார் ஔவையார். மோனம் என்பது மௌனமாகும். அது உள்ளார்ந்த விரிந்து பரந்த பொருளுடைய சொல். எண்ணிலா ஆற்றல்கள் அனைத்திற்கும் ஒரு குறியீடாகிய சொல். மௌனமே சிந்தனையின் ஊற்றிடம்; தெளிவின் பிறப்பிடம்; வரம்பிகந்த ஆற்றல்களை வழங்கிடும் அருளிடம். தன்னை உணரவும் தலைவனை உணரவும் வழிசெய்வது மௌனமே ஆகும். மௌனம் உடற்கூற்றிற்கு இன்பம் செய்கிறது, மனம் மௌனத்தால் தூய்மை அடைகின்றது. மௌனம் என்பது 1. மன மௌனம். உ. வாக்கு மௌனம். 3. காய மௌனம் என்று மூன்றுவகைப்படும். பொருள்தரும் சொற்களைப் பேசாதிருத்தல்மட்டும் மௌனம் ஆவதில்லை. அதனால் பயன் குறைவேயாகும். மனம் அழுக்காறு, அவா, வெகுளிகளைக்கடந்து புலனடங்க இருத்தலே மனமௌனம் ஆம். வெற்றுச்சொற்களை வெளியிடாதிருத்தல் வாக்கு மௌனம் ஆகும். உடலின் தொழிற்பாடுகள் அடங்கிச் சீலமெய்ஞ்ஞானம் தெளிதலே காய மௌனம் எனப்படும்.

அஃதாவது 'உள்ளும் புறமும் ஒருமித்துருகி, வெள்ளம்போல விழிநீர் பெருக்கி . கன்று பசுவைக் கருதிச் சென்று ஓடித்திகைப்பது போல, என்பு நெக்குடைய இருகரங்குவித்துப் புன்புலால் யாக்கைப் பொருந்தாது இனி என உணர்ந்து, அன்பால் உவகை மேற்கொண்டு இனிக் கணம் பிரியேன் எனக்கருதித் திருவுரு எல்லாம் திருநீறு இலங்க, இருகர நளினம் இயன்முடி குவித்துப் பூரணசந்திரன் போல ஒளிகாட்டும் காரணவதனம் கவின்குறு வெயர்வுற இளநிலா எனவே இலங்கிய சிறுநகை, தளதள எனத் தயங்கி எழில்பெற இத்தன்மை எல்லாம் இசைந்து சிவன் அருளே சிந்தித்திருத்தலே" மௌனம். அறிவின் முதிர்ச்சியில் மௌனம் ஏற்படுகின்றது. மௌனத்தின் உன்னதத்தில் இறைநிலை பொருந்துகின்றது. மௌனம் மறைமுடிவான அருள்நாட்டம் தரும். இத்தன்மையால் சிறந்த ஸ்ரீ மௌனகுரு, தாயுமானவருக்கு இருசொல் உரையாது இன்பம் எய்த **'ஒருசொல்' உரைத்தார்.**

**மௌனியர் மூவர் :**

பொதுவாக வாழ்க்கையில் திருப்பமும், வளர்ச்சியும், மாற்றமும் ஏற்படுவதற்குப் பலவகைகளில் நமக்கு வழிகாட்டும் ஆசிரியர்களே காரணமாக அமைகின்றனர். வாழ்வின் தலைசிறந்த மாண்பு, வாழ்வெனும் மயலைச் சிக்கறுத்து வழிகாட்டும் நல்லாசிரியர் வாய்க்கப் பெறுவதே யாகும். எவர் ஒருவருக்குச் சிறந்த ஆசிரியர் அமைகின்றாரோ, அவர் உயர்நிலை அடைகிறார். நம் தாயுமானவரின் உள்ளத்திலிருந்து உணர்த்திவந்த ஆசிரியருக்கு ஆசிரியரான இறைவன் நேர்முகமாகவும் மௌனிவடிவில் தோன்றி அருள்புரிகின்றான்.

தாயுமானவர் தான், மௌனியர் மூவருக்கு அடித்தொழும்பு செய்து உயர்ந்ததாகக் கூறுகின்றார். "சித்தமவுனி, வடபான்மவுனி, நந்தீப குண்டசுத்த மவுனி என்னும் மூவருக்கும் தொழும்பு செய்து, சத்த மவுன முதல் மூன்று மௌனமுந்தான் படைத்தேன், நித்த மவுன மல்லால் அறியேன், மற்ற நிட்டைகளே" என்பது அவர் வாக்கு. (1) சித்தமவுனி : உபதேச குரு ஆவார். (2) வடபான் மவுனி : வடக்கேயிருந்து தென் முகம் நோக்கியிருக்கும் தென்முகக் கடவுள், (3) தீபகுண்ட சுத்தமவுனி : தீட்சா தரு ஆவார். தனக்குச் சிவ ஞான சித்திநெறியை மௌனம் வழி உணர்த்தினர் என்று, மௌன குருவைப் போற்றுகின்றார். "ஆகமத் துணிபு இரண்டில்லை, ஒன்று எனவே வந்த குருவே வீறு சிவஞானசித்திநெறி மௌனோபதேச குருவே" என்பது அவர் பாடல்.

**"மோனகுரு சொன்ன ஒருசொல்"**

தாயுமானவர் "குருவே, நீசொன்ன 'ஒரு சொல்லை' 'மலையிலக்கு' என நம்பினேன்" என்றும், "பரம வெளியாய் ஒருசொல் திட்டமுடன் மௌனியாய் அருள் செய்திருக்கவும்" என்றும். "மந்தார தாருவென வந்து மவுன குரு தந்தானோர் சொற்கொண்டு" என்றும். "ஆண்டான் மவுனியளித்தஅறிவால்" என்றும் குறித்திடும் தொடர்களிலிருந்து நாம் அறியும் உண்மையாவது,

"ஆறுளொன்றை நாடின் அதற்காறுமுண்டாம் என்றெமக்குக்
கூறு மவுனியருள் கூடுநாள் எந்நாளோ"

என்பதாகும். இத்தொடர் ஓரளவு விளக்கந்தான் தருகிறது. அதாவது, நாடியதற்கு வழிகாட்டினர் என்பதே அவ்வுண்மையாகும். மேலும், "ஐயனைக் கல்லாலரசை துய்ய கரமலராற் சொல்லாமற் சொன்னவுண்மை அறிந்தேன்" என்னும் தொடரால், அவர் வாயாலன்று, சைகையால் (மொழியாலன்று கையால்) அறிவுரை வழங்கினர் என்பது தெரியவருகிறது.

"நில்லாமல் இன்று அருளை நேரே பார் என்ற ஒரு சொல்லான் மவுனி தேற்றுநாள் எந்நாளோ" என்பதால் இறையருள்பெற குரு உபதேசம் தேவை என்பதையும் அறியலாம். 'வெற்றுச்சொல் முழக்கங்களால் பயனேதும் இல்லை ஐய, மௌனியாய் சும்மா இருக்க அருளாய்' கனி, செங்காய், சருகு, கந்தமூலம் இவைகளைப் பசிவந்த போது, நான் அள்ளிப் பருகி, புசித்து கண்மூடி மௌனியாகித் தனியே இருப்பதற்கு எண்ணினேன்' என்று அவர் கூறுவதை நோக்கினால், அவர் விரும்பிய நிலை இதுதான் என்பதை அறியலாம். மௌனகுரு தனக்குச் சும்மா இருக்க வழிகாட்டினார் என்றும், அதனால், வருத்தமற்றிருக்கும் நிலை தனக்குக் கிடைத்தது என்றும், 'கல்லால் நிழலில் இருக்கும் சிவன் உபதேசமும் இதுதான்' என்றும் கூறுகின்றார்.

**மோனகுருவைப் போற்றுதல் :**

நெஞ்சமே! மோனகுரு சொன்ன ஒரு சொல்லால் நீ சுகமாக இரு. உனக்கு எந்த மயக்கமும் வேண்டாம் தானம், தவம், ஞானம், சாற்றரிய சித்தி முத்தி ஆனவை எல்லாம் தாமே ஆகும் என்றும், சித்தும் சடமும் சிவத்தைவிட இல்லை என்ற நித்தன் பரமகுரு நேசத்தால் சுத்தநிலை பெற்றாய், இனி உனக்குப் பிறவி என்பது இல்லை என்றும், மோனகுரு அளித்த மோனமே ஆனந்தம். அது ஞானம் அருளும்! நானே அதுதான்! வானம் முதலாக உள்ளதும் அதுதான் என்பதை அறிந்தேன் என்றும், மனமே! உன்னை ஒரு பொருளாக நான் மதிக்க மாட்டேன்! காரணம் என்ன தெரியுமா? என் குருநாதர் எனக்கும் உனக்கும் உறவு இல்லை என்பதைத் தேர்ந்து, நினைத்துப் பார்க்கமுடியாத இன்பநிட்டையினைத் தந்தார் என்றும், இடம், வானம், நல்லபொருள், இன்பம், எனக்கு ஏவல் செய்யும் கருவிகள் இவை அனைத்தையும் உடனே உதவ, தேவலோகத்து மந்தார தருபோல வந்து மௌனகுரு அருள்புரிந்தார் என்றும் கூறித் தம் நெஞ்சிற்கு அறிவுரை வழங்குகின்றார்.

தந்தை, தாய், மகவு, மனைவாழ்க்கை, உடல், உலகப் பொருள் இவையாவும் மவுனி அருள்கிடைத்தவுடன், இந்திரசாலம் போலவும், கனவு போலவும், கானல் நீர் போலவும் எனக்கு இருந்தனவே! என்னே! என்னே! என்றும், ஞானநெறிக்கு ஏற்றகுரு, நண்ணரிய சித்திமுத்தி தானம் தருமம் தழைத்தகுரு, மானமொடு தாயெனவும் வந்து என்னைத் தந்தகுரு, என் சிந்தை கோயிலென வாழுங்குரு என்றும் மோன குருவைப் போற்றித் தன் நெஞ்சிற்கு அறிவுறுத்துகின்றார்.

**குருவின் பேராற்றல் :**

குருவுருவாகி வந்த பரங்கருணைத் தடங்கடலாகிய இறைவின் ஆற்றலைத் தாயுமானவர் பலவாறு வியந்துரைக்கின்றார். 'இள நிலாவைச் செஞ்சடையில் உடைய, பேசாப் பெருமையும், கள்ள விழும் பூங்கொன்றைக் கண்ணியும் உடைய பெருமான் தென்முகக் கடவுளாக வந்து, உள்ளபடி கல்லாலின் கீழிருந்து கற்பித்தான் ஓர் வசனம். அதனால், இவ்வுலகம் ஈடேறியது' என்றும், 'பிறையணிந்த மிக்க கயிலாய மலை வித்தகனே! வேதியனே! செக்கரணி மேனியனே! நிறைகுடந்தான் மேலும் நீரைக்கொள்ளுமோ? கொள்ளாது. மோனமுறை உணர்ந்தார் யாதை முயல்வார்? எல்லாம் மோனத்தால் பெறுவார் என்றும், பரமே! நீயென நானென வேறில்லை எனும் நினைவு அருளத் தாயென மோனகுருவாகிவந்து தடுத்து அடிமைச் சேயெனக் காத்தனையே, ஏழையாகிய யான் நின் திருவருளுக்கே என் செய்யும் கைம்மாறு உளதோ? என்றும் வியக்கின்றார்.

குருவே! நீ காண, காட்டில் பசுவும் புலியும் குலாவி நிற்கும். நீ கை காட்ட மதயானை, தன் கையால் பெரிய மரம் ஒன்றைப் பெயர்த்து எடுத்து ஏந்தி வரும். காமதேனுவும் நின் பொன்னடியில் வந்து போனகம் அருளுமே, புவிராசரும், கவிராசரும், தவராசரும் உன்னைப் போற்றிநிற்பர் உன் கருணைமுகங்கண்ட அளவில் நவநாத சித்தர்களும் உன் நட்பினை விரும்புவார்கள். சுகர் வாமதேவர் முதலிய ஞானிகள் உன்னைப் போற்றுவார்கள். வானும் மண்ணும் ஓரணியில் வந்து வணங்கிடும். உன் மகிமை சொற்களால் சொல்லக்கூடியதோ? என்றும் போற்றுகின்றார். இவ்வாறு போற்றி வணங்கினால் பிறவித் தளை அறும் என்றும் அறுதியிடுகின்றார்.

---


# ELLORA FABRICS

## (INDIA)

OLD TEHSIL, MEERUT CITY. (U. P.) INDIA.

Wanted Sales Agents on Salary - cum Commission for **Ellora - Fabrics** (India) Ismail Nagar, Meerut City (U. P.) Manufacturing Fabrics for Ladies : Gents : T. A. / D. A., advances.

30—7—'79.

# சேக்கிழார் விளக்கும் தத்துவச்செந்நெறி

சித்தாந்தப்புலவர்மணி.

திரு. ந. ரா. முருகவேள் M, A., M. O. L.

**முன்னுரை :**

நமது தமிழ்நாட்டின் தெய்வப்புலவர்களுள் ஒருவர் சேக்கிழார் சுவாமிகள். அவர் இயற்றியருளியநூல் பெரியபுராணம். அஃது எத்தகையோ பல அரும்பெரும் சிறப்புக்கள் வாய்ந்தது. ஆயினும், பெரும்பாலோர் அதன்கண்வரும் கதைப்பகுதிகளைமட்டுமே அறிவர்; படிப்பர். பெரியபுராண விரிவுரைகள் செய்வோரும், அதன் கதைப் பகுதிகளைமட்டுமே பொதுவாகக் கூறிச்செல்வர். பெரியபுராணம் மிக எளிய இனிய தெளிவான நடையிலேயே அமைந்திருக்கின்றது. எனினும், அதன்கண் இடையிடையே அரிய நுண்ணிய ஆழமான கருத்துக்கள் நிறைந்த பகுதிகள் பல உண்டு. அவற்றைப் பெரும் பாலோர் படிப்பதில்லை. பொதுவாக அவற்றை ஒதுக்கிவிட்டுக்கடந்து மேற்செல்வதே பெரும்பாலும் பழக்கமாக இருந்துவருகின்றது.

**சேக்கிழார் :**

சேக்கிழார்சுவாமிகள், நாயன்மார்களின் கதை அல்லது வரலாறு களை மட்டுமே பாடி அருளியவர் அல்லர். கதைகளைக் கலைநுட்பமும் கருத்தாழமும் கற்பனைவளமும் தத்துவச்செறிவும் அமையும்படி அழகுறப்பாடி அளித்தவர். அவர் தம் பெரியபுராணம் வெறும் கதை களைமட்டுமே கொண்டதன்று; எத்துணையோ பல சமய தத்துவ நுட்ப விளக்கங்களை உட்கொண்டது.

**சம்பந்தர் புராணம் :**

திருஞானசம்பந்தர் புராணத்தில், போதிமங்கையில், பௌத்த சமயத்தவர்களில் தலைவராக விளங்கிய **சாரிபுத்தன்** என்பவருக்கும், திருஞானசம்பந்தரின் அருள் ஆசிபெற்ற **சம்பந்தசரணாலயர்** என்ப வருக்கும் இடையே நிகழ்ந்ததாக அமைந்துள்ள தத்துவவாதப்பகுதி, மிகவும் நுண்பொருட்செறிவு வாய்ந்ததாகும். அப்பகுதியின்கண் சேக்கிழார் விளக்கியருளும் தத்துவச் செந்நெறியின் சிறப்பினைக் காணலாம். ஆதலின் அப்பகுதியிற்போதரும் பெரியபுராணப் பாடல் களின் கருத்துக்கள், இங்குச் சுருக்கமாகத் தொகுத்துப் பலரும் படித்து இன்புற, உரை நடையில் தரப்பெறுகின்றன.

**தத்துவவாதம் :**

பௌத்தர்கள் விடுத்த அறைகூவலை ஏற்றுக்கொண்ட சம்பந்த சரணாலயர், பௌத்தர்களின் தலைவராகிய சாரிபுத்தன் என்பவரை நோக்கி, "இனி நாம் வாதத்தைத் தொடங்குவோம். உங்களுடைய கடவுளின் இயல்பினையும், அவர் அருளிச்செய்து விளக்கியுள்ள வீடுபேற்று இயல்பினையும் பற்றிக் கூறுக" என்றார். அதன்படியே தொடங்கப்பெற்ற சமய வாதத்தில், சாரிபுத்தன் என்பவர், தமது பௌத்த சமயத்தின் கொள்கைகளைக் கூறலாயினர். அவர்கள் புரிந்த தத்துவ வாதம் வருமாறு :–

**சாரிபுத்தன் :** புத்தர்பெருமான் எங்களது பௌத்தசமயத்தின் தலைவர். அவர் எல்லையற்ற வழிகள்தோறும், எத்தனையோ பற்பல எண்ணற்ற பிறவி வேறுபாடுகளில் புகுந்து பிறந்தும் இறந்தும் பிற உயிர்களுக்கு உறுதி செய்து, பின்னர் அக்கதியினின்றும் மாறி வீடு பேறு எய்தினார். கணபங்கம் என்னும் நிலையாமை இயல்பு கூறுவது, எங்களுடைய பௌத்த சமயம். அதன்கண் நின்று தானம் தவம் யோகம் என்பவற்றை முறையாகச் செய்தால், அவற்றின் பயனாக ஞானம் உதிக்கும். அந்த ஞானத்தினால் பேரின்ப முத்தியைப் பெறலாம். அங்ஙனம் ஞானம் எய்திப் பேரின்ப முத்தி பெற்றவரே, எங்களுடைய புத்தர்பெருமான். எல்லா மக்களும் உய்தி பெற்று ஈடேறும்படி, அவர் தருமநெறிகளை உலகிற்கு உபதேசித்தார். அவரே நாங்கள் வணங்குகின்ற கடவுளாவர்.

**சரணாலயர் :** நல்லது; உங்களது தலைவர் ஆகிய புத்தர் வீடு பேறாகிய முத்திபெற்றார் என்று கூறினீர், அம் முத்தியின் இயல்பு எத்தகையது ?

**சாரிபுத்தன் :** அறிவுள்ள உயிர்கள் எல்லாம், உருவம் - வேதனை - குறிப்பு - செய்கை - ஞானம் என்கிற, ஐந்து கந்தங்களும் சேரும் சேர்க்கையால் உண்டாவன. இவ்வைந்தும் நீங்கி அழிந்தொழிதலே வீடுபேறு ஆகிய முத்தி அல்லது நிர்வாணம் என்பது, பௌத்தர்களாகிய எங்களுடைய கொள்கை.

**சரணாலயர் :** உங்களது சமயத்துக்குரிய தலைவராகிய புத்தர் முத்திபெற்றார் எனில், அவர் முன்பு பெற்றிருந்த ஞானம் முதலாகிய ஐந்து கந்தங்களின் சேர்க்கையும், அவரிடமிருந்து ஒருங்கே அழிந்து கெட்டிருத்தல் வேண்டும். அங்ஙனம் அழிந்து கெட்டனவாயின், உங்கள் கொள்கையின்படி அவரும் அழிந்தனராதல் வேண்டும். அழிந்த பின்னர் அவரை இருப்பவராகக் கொண்டு, நீவிர் **விகாரை** (Vihar) என்னும் கோயில்களைக் கட்டி, அவற்றுள் நிற்றல் இருத்தல்

படுத்தல் ஆகிய நிலைகளில், அவருக்கு வடிவங்களையும் அமைத்து, ஊட்டுதல் பூச்சூட்டுதல் கேட்பித்தல் முதலிய வழிபாடுகளையும் செய்வது எற்றுக்கு? நீவிர் செய்யும் வழிபாடுகளை ஏற்றுக்கொள்பவர் யாவர்?

**சாரிபுத்தன் :** இருவினைக்குக் காரணமாகப் பஞ்சகந்தம் ஆகிய உடம்பு கெட, எம்தலைவன் முத்தியிற் சேர்ந்திருக்கின்றார். அதனால் அவருக்குக் கோயிலும் வடிவமும் விழாவும் பூசையும் எடுத்தல் பொருந்துவதேயாகும்.

**சரணாலயர் :** இருவினைக்குக் காரணமான பஞ்ச கந்தங்களால் ஆகிய உடம்பு கெடுதலே முத்தி என்றீர். அங்ஙனமாயின் முத்தியிற் சேர்ந்ததும், அவருக்கு உடலும், பொருள்களை உணரும் கருவிகளாகிய கண் முதலிய கரணங்களும் இல்லாது ஒழிதல் திண்ணம். உடலும், கரணங்களும் இல்லாதொழிந்தால், அவருக்கு உணர்வு உதித்தல் இல்லையாகும். அவர்பொருட்டு உங்களாற் செய்யப்பெறும் வழிபாட்டை ஏற்றுக்கொள்ளுதற்கு, அவருக்கு உணர்வு வேண்டும்; அவருக்கு அவ்வுணர்வு உண்டாதற்கு வாய்ப்பு இல்லை. ஏனெனில் முத்தி நிலையில் ஐந்து கந்தங்களும் அவிந்து ஒழிகின்றன என்பது உங்கள் கொள்கை. ஆதலின் உங்கள் தலைவனுக்கு முத்திநிலையில் உணர்வு நிகழ்வதும் நீவிர் செய்யும் வழிபாடு புலனாவதும் இல்லை. எனவே நீவிர் அவர் இருப்பதாகக் கொண்டு, இங்கு எடுக்கும் கோயில் - வடிவம் - வழிபாடு முதலியன பயனில் செயல்களேயாகும்.

**சாரிபுத்தன் :** அறிவு உணர்தலின்றி உறக்கத்தில் அழுந்திக் கிடக்கின்ற ஒருவனை, மற்றொருவன் நிந்தித்து மிதிப்பானாயின் உறங்குபவன் அதனை உணராவிடினும், நிந்தித்து மிதித்தவனுக்கு அச்செயல்களாலாய தீவினைப்பயன் வந்தேதீரும். அதுபோல, முத்தியில் இருக்கும் எங்கள் முதல்வன் எமது வழிபாடு முதலியவற்றை உணராவிடினும்கூட யாம் செய்யும் வழிபாடு முதலியவற்றின் பயன் எமக்கு வருதல் திண்ணம்.

**சரணாலயர் :** ஒருவன் தனக்காகச் செய்யப்படும் ஒரு செயலின் பயனை எய்துவதற்கு, அதனை அவன் உடன்படுதலோ வெறுத்தலோ செய்தல் வேண்டும். இரண்டுமே நிகழாதபோது, ஒருவன் ஒரு செயலின் பயனை எய்துவதில்லை. உம் தலைவன் பஞ்சகந்தமும் அவிந்த நிலையாகிய முத்தியில் நின்றான் எனப்படுதலால், உடன்பாடோ வெறுப்போ அவன்பால் நிகழ்தற்கு வாய்ப்பு இல்லை. ஆதலின் அவன் நும் வழிபாட்டினை ஏற்றுக்கொள்ளுதலோ பயன் தருதலோ இல்லை.

**சாரிபுத்தன் :** பயன் வருதலுக்கு உடன்பாடும் எதிர்வும் ஆகிய உணர்வுடைய மனநிலை வேண்டுவதில்லை. முன்னைய உணர்வு

இன்றி உறங்கினவனுக்குப் புது நிகழ்ச்சிகளில் உடன்பாடும் எதிர்வும் இல்லை. ஆனால் அவனைக் கொன்ற ஒருவனுக்குக் கொலைப்பாவம் வரும். அதுபோல எம் இறைவனுக்கு எமது வழிபாட்டில் உடன் பாடும் எதிர்வும் இலவாயினும், வழிபாட்டின் பயன் எமக்கு வருதல் ஒருதலை.

**சரணாலயர் :** நன்று சொன்னாய் உறங்கினோன் கொலைப் பயன் போல, வழிபாட்டின் பயன்வரும் என்றாய். கொலையினால் பிரிக்கப் பட்ட உயிரும், உடலும் கொலைத் துன்பம் எய்திய உட்கருவிகளும் உண்டு என்பது, நின் உவமையினால் பெறப்படும். அவ்வுவமை யின் படி, உனக்கு உன் வழிபாட்டின் பலன் வருதற்கு, உனது வழி பாட்டிற்குரிய இறைவனுக்கு உயிரும் உடலும் கருவிகளும் ஆகியவை அம் முத்தி நிலையிலும் இருத்தல் வேண்டும். அங்ஙனம் இருப்பின், அது கந்தங்கள் அழிந்த நிலை அன்றாம். அன்றாயின் நுமது புத்தன் முத்தியில் சென்றதும் இல்லையாய் முடியும். நீ செய்யும் வழிபாட்டின் பயன் நினக்கு வரவேண்டுமானால், நின் முதல்வனுக்கு உடல் உயிர் கரணம் ஆகியவைகள் அமைந்திருத்தல்வேண்டும்; அவன் அழியாத முத்தியில் சென்றிருப்பானாயின், உடல் உயிர் கரணம் முதலியன அவனுக்கு இல்லையாய், முன்பே கெட்டொழிந்திருத்தல் வேண்டும். இதனால் நின்னுடைய கொள்கையும் கூற்றும். ஒன்றினொன்று பொருந்தாமல், முற்றிலும் முரண்பட்டு நிற்கின்றன.

மேலும் நின் தலைவன் ஒழியாத பேரின்ப முத்தியுற்றான் என்றாய்: "ஞானமே ஆன்மா; அது நீரோட்டம் போலத் தொடர்ச்சியாய்க் கணந்தோறும் தோன்றி அழியும்; அவ்வாறு தோன்றி அழியுங்கால் வரும் வாசனையைப் பற்றுதலால் அறிவு நிகழும். அவ்வாசனையும் ஞானமும் அழிவதே, முத்தி" என்பது நினது கொள்கை. இன்பம் அடைதற்கு அறிவு உள்ளதாதல் வேண்டும். அறிவு நிகழ்தற்குக் கந்தங்களின் செயற்பாடு வேண்டும். நீ சொல்லுவதுபோலக் கந்தத் துடனே அறிவும் கெடுதலே முத்தியாயின், அந்த முத்தியில் இன்பம் அடைதற்கு எத்தகைய வாய்ப்பும் இல்லை.

"கந்தங்கள் அவிந்து பொய்யாய் முடிந்த நிலையில், எம் புத்தன் முத்தியில் சேர்ந்தான்" என்றும்; "அதற்கும் முன்னரே அவன் எல்லாப்பொருள்களையும் உணர்ந்து, உலகம் உய்ய அறம் உரைத்துப் போயினான்" என்றும் கூறினாய். கணந்தோறும் தோன்றி அழியும் இயல்பிற்றாகிய அறிவினையுடைய அவன் கணந்தோறும் தோன்றி அழியும் பொருள்கள் முழுவதையும் ஒருங்குஉணர்தல்யாங்ஙனம்? நும் புத்தன் பெற்ற முத்திநிலை பொய்யாயினவாறுபோல, அவன் எல்லாம் உணர்ந்து அறம் உரைத்துப் போந்தான் எனபதும், பொய்யேயாகும்.

**சாரிபுத்தன் :** உணர்வாவது பொதுவும் சிறப்பும் என்று இரண்டு வகைப்படும். ஓர் இடத்தில் அடர்ந்துள்ள மரங்களைப் பிரித்துக்கூறு மல், தொகுதியாக நோக்கிக் **காடு** என்றல் பொது உணர்வு. அங்ஙன மின்றி அங்குள்ள மரங்களைத் தனித்தனியாகச் சுட்டித் **தேக்கு - வேங்கை - சந்தனம் - மந்தாரம்** என்று தனித்தனியே பிரித்து உணர் தல் சிறப்புணர்வு, இவ்வாறே எல்லாப் பொருள்களின் உணர்வும், பொதுவும் சிறப்பும் என இரு திறப்படும். தீயானது விறகுக் குவிய லின் வைப்பிலும் சுட்டெரிக்கின்றது; விறகைப் பிரித்துத் தனித் தனியே ஒவ்வொன்ருக வைப்பினும் சுட்டெரிக்கின்றது. அதுபோல உணர்வானது, எல்லாப் பொருள்களையும் சேர்த்து ஒரு தொகுதி யாய்ப் பொதுவாகவும் கண்டு கூறும்; தனித்தனியாகப் பிரித்துச் சிறப்பாகவும் சுட்டும். இவ்வகையிலேயே எங்கள் முதல்வனும் பொருள்களையெல்லாம் தொகுத்தும், விரித்தும் முதற்கண் தான் உணருகின்ருன்; பின்னர்த் தொகுத்தும் விரித்தும் ஏனையர்க்கு உரைக்கின்ருன்.

**சரணுலயர்:** நன்றுகூறினுய். உணர்வு இல்லா தசடமாகிய தீயின் செயலை, சித்து ஆகிய உணர்வின் செயலுக்கு உவமையாக எடுத்துக் காட்டினுய். பொருள்களைச் சார்ந்து நின்ற உணர்வு உருவுடைய தன்று. நீ உவமை கூறிய எரியோ, உருவம் உடையது. ஆதலின் நீ கூறிய உவமை இடப்பொருத்தம் உடையதன்று. மற்றும் நின் தலைவன் நிகழ்காலமேயன்றி, மற்றும் அதனை முன்னும் பின்னுமாகத் தொடர்ந்துவரும் இறப்பு எதிர்வு என்னும் காலங்களையும் தொகுத்து, முக்காலமும் ஒருங்கே அறிவான் என்ருய். அங்ஙனம் நின் தலைவன் அறிவானுயின், முக்காலமும் உணரும் உணர்வுக்கு உவமையாகக் கூறிய பொருளாகிய எரியும்கூட, நிகழ்காலத்தில் இடப்பெற்றபோது சுடுதலே அன்றி ஏனைய இறப்பு எதிர்வுகளிலும் கூடச் சென்று சுடுதல் வேண்டும். தீயானது அங்ஙனம் சுடுதல் யாண்டும் இல்லை யாதலின், நீ கூறிய உவமை காலப் பொருத்தமும் உடையதன்று

ஆதலின், நீ கூறிய முத்தியிலக்கணம் பொருந்தாதவாறுபோல, நின் தலைவன் ஒரு கணத்திலேயே எல்லாப் பொருள்களையும் முழு தொருங்குணர்ந்தான் என மொழிந்த நின் கூற்றும் பொருந்தாமல் புரைபட்டது. எனவே, இத்தகைய புரைபட்ட அறிவுடன், நின் தலைவன் ஆகிய புத்தன் கூறிய திரிபிடகம் என்னும் நூலும் புரை யுடைத்தேயாகும்.

இது கேட்ட சாரிபுத்தன், மேலும் வேறு ஏதும்பேச வழியின்றி' வாயடைத்து நின்ருன். தான் கூறியவற்றைக் கொண்டே, தன் கூற்றுக்களை மறுத்தது கண்டு, அவன் செய்வது அறியாது திகைத் தான். அப்போது சம்பந்தப்பெருமான், "சமயம் என்பது அறநெறி பிறழாத பயன்மிக்க நல்லொழுக்க வாழ்க்கையேயன்றி, வெறும் அறிவு

நெறி தழுவிய பயனில் வாதமும் நம்பிக்கைகளும் அன்று'' (Religion is not mere correct belief but righteous living) என்று, பல வகைகளில் அறிவுறுத்தி, அவனைச் சிந்தை திருத்தித் தெளிவுபெறச் செய்தருளினர் என்று சேக்கிழார் சுவாமிகள் தமது பெரியபுராணத் தின்கண் (செய்யுட்கள் 2817 முதல் 2827 வரை) கூறிச் செல்கின்றார்.

**முடிவுரை :**

இப் பெரியபுராணப் பகுதியில், நாம் ஊன்றி நோக்கி உணர்ந்து கொள்ளத் தகுவன பல உள்ளன. போதிமங்கையில் வாதம் நிகழ்ந்த போது. சேக்கிழார்பெருமான் அதனை உடனிருந்து நேரேகாண்கிலர். மற்றும், இங்ஙனம் நிகழ்ந்திருத்தல்கூடும் என்பதனையே அவர் நுண் ணிதின் ஓர்ந்துணர்ந்து ஆராய்ந்து பாடியருளியிருக்கின்றார். இஃது அவர்தம் நுண்மாண் நுழைபுலத்திற்குச் சிறந்த பெருஞ் சான்றாகும். பண்டைக்காலத்தில் "ஒட்டிய சமயத்து உறுபொருள்வாதிகள் பட்டி மண்டபத்துப் பாங்கறிந்து ஏறி'' இருந்து நிகழ்த்திய சொற்போர்த் திறங்களையே, சேக்கிழார் பெருமான் இப்பகுதியில் பொற்புற விளக்கி யுள்ளார். சமய வாதங்கள் நேர்தல் கூடாது; ஒரோவழி இன்றியமை யாது நேர்ந்தால் வாதங்களை எங்ஙனம் நிகழ்த்துதல் வேண்டும் என்பதனைத் தருக்கநெறி முறைகளுக்கு ஏற்பவும், தத்துவ நூற் கொள்கைகளின் அடிப்படையிலும், சுவாமிகள் நம் உளங்கொளத் திறம்பட நிகழ்த்திக் காட்டியருளியிருக்கின்றார்.

ஆசிரியர் **அருள்நந்தி சிவாசாரியார்**, தமது சிவஞானசித்தியா ரின் பரபக்கப் பகுதியில் பலவேறு மதக் கொள்கைகளையும் முறையே எடுத்துக்கூறி. அவற்றைப் பின்னர் மறுத்துரைத்து. நமக்குத்தத்துவ ஞான விளக்கம் செய்தருள்கின்றார். அத்துறையில், அருள்நந்தி சிவத்திற்கு ஓர் வழிகாட்டியாகவும், முன்னோடியாகவும் விளங்கியவர், சேக்கிழார் பெருமானேயாவர் எனலாம்.

பெரியபுராணத்தில், திருஞானசம்பந்தர் வரலாற்றில், சம்பந்த சரணாலயரால் மறுக்கப்பட்ட பௌத்தக் கொள்கை, **மாத்தியமிகம் யோகாசாரம் வைபாடிகம் சௌத்திராந்திகம்** என்னும் நால்வகைப் பிரிவுகளுள், **சௌத்திராந்திகம்** என்பதே யாகும். இதனையே, **சித்தியார் பரபக்கப்பகுதியில்** அருள்நந்திசிவம் விரிவாக விளக்கி மறுத்துரைத்து அருள்கின்றார். எனவே, ஆசிரியர் அருள்நந்தி சிவத்தின் தத்துவ விளக்கச் செந்நெறிக்கு வழிவகுத்துக் காட்டிய சான்றோர் சேக்கிழார் சுவாமிகளே என்பதும், சிவஞானசித்தியாரின் பரபக்கப்பகுதி அமைப்புக்கு அடிகோலிய அருள்நூல் பெரியபுராணமே என்பதும் நன்கினிது தெளியப்படும்.

சேக்கிழார் புகழ் வாழ்க! பெரியபுராணம் எங்கும் பரவுக!

**மதிப்புரை:**

# சைவ சமயத் தோற்றமும் வளர்ச்சியும்

ஆசிரியர்: டாக்டர். டி. பி. சித்தலிங்கம், பக்கங்கள் 180. வெளியிடுவோர் : சோமு நூலகம், சாஸ்திரிநகர் அஞ்சல் நிலையக் கட்டிடம் சென்னை - 20. விலை. ரூ. 8—00.

இந்நூலாசிரியர் டாக்டர். டி பி சித்தலிங்கம் அவர்கள் தமிழுலகிற்கும் சமய உலகிற்கும் நன்கு அறிமுகமான அறிஞர். அவர் எழுதிய இந்நூல் காசிப் பல்கலைக் கழகத்தின் பிஎச். டி. பட்டத்திற்கு வழங்கிய ஆராய்ச்சிக் கட்டுரையின் ஒரு பகுதியாகும்.

இந்நூலில் டாக்டர் அவர்கள் இந்து சமயம் உலகுக்கு அளித்த தெய்வமே சிவன் என்பதைப் பல மேற்கோள்களால் நிறுவியுள்ளார். சிவபெருமானைப் பண்டைத் தமிழர்கள் பல்வேறு பெயர்களால் வழங்கியதை எடுத்துக்காட்டி, சிவன் என்ற சொல் தமிழ்ச்சொல்லே என்று முடிவுசெய்கிறார். சங்கநூல்கள், பிற்கால நூல்களில் சைவ சமயம் பற்றியும் கடவுள் வழிபாடு பற்றியும் கூறும்பகுதிகளை ஆராய்ந்துள்ளார். பக்தி இலக்கிய அமைப்பையும் சிறப்பையும் விளக்கியுள்ளார். சைவசித்தாந்தநெறி மிகத் தொன்மையானது என்பதையும், அதனை மெய்கண்டார் இலக்கியங்கண்டு அதற்கு இலக்கணம் இயம்புதல்போலத் திருமுறைகள் மற்றும் பிறநூல்கள் ஆகியவற்றிலிருந்து தொகுத்து முதன்முதல் நெறிப்படுத்திய சிறப்புக்குரியார் எனவும் உரைத்துள்ளார். உமாபதிசிவம் அருளிய நூற்கருத்துக்களை எடுத்துக்காட்டி, சந்தானகுரவர் பரம்பரை, தமிழகத்தில் திருவாவடுதுறை தருமபுரம் முதலிய ஆதீனங்களின் வழியாகத் தமிழ் மக்களுக்கு உண்மை ஞானங்களை உணர்த்திவருகிறது என்றும் கூறியுள்ளார்.

இந்நூலில் வந்துள்ள சைவ சித்தாந்தச் சொற்களின் விளக்கம் பிற்சேர்க்கையாகத் தரப்பெற்றுள்ளது. அடிக்குறிப்புக்கள் விரிவாகவுள்ளன. தருமையாதீன வெளியீடுகள் பல இந்நூலுக்குப் பயன் பட்டுள்ளன என்பதை மேற்கோள் நூல்களில் குறிப்பிட்டுள்ளார்.

சைவசமய நூல்களை ஆராயும் ஆராய்ச்சியைமேற்கொண்ட இந்நூலாசிரியர் பாராட்டுக்குரியவர். இந்நூல் சைவ சமய நெறிகளையும் அதன் சிறப்புக்களையும் ஆராய விரும்பும் அன்பர்கட்கும் அறிஞர்களுக்கும் சைவம் பற்றிய பாடப்பகுதிகளைப் படிக்கும் கல்லூரி மாணவர்கட்கும் பெரிதும் துணைபுரியும்.

— வி. சா. குருசாமி.

அப்பழக்கம் வரவேண்டுமானுல் இந்தமாதிரி வழிபாட்டில் கலந்து கொள்ளவேண்டும். இந்த வழிபாடு சமுதாயத்தின் நலனுக்கும் உதவுகிறது என்று கூறினுர்.

பின்னர்பேசிய திரு ஞானமூர்த்தி சேக்கிழார் பிறப்பிடமாகிய குன்றத்தூரில் வந்து வழிபடுவதும் பேசுவதும் புண்ணியமுடையார் கட்கே எய்தும்; முருகப்பெருமானுக்கு ஔவைப்பிராட்டியார் விளக்கிச் சொன்னதுபோல அடியார்களின் உள்ளங்களில் எப்பொழுதும் இறைவன் குடிகொண்டிருக்கிருர். அவனைக் காணவேண்டும் என்கிற குறிக்கோளுடன் தியானம் செய்து இந்தப் பிறவியாகிய பிணியைப் போக்கிக்கொள்ள வேண்டும். ஆண்டவனை மெய்ம்மறந்து பூசிக்க வேண்டும். அந்நிலை வருதற்குச் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கு நிலைகளில் முதல் மூன்று நிலைகளைக் கடந்து கடைசி நிலையான ஞானநிலையை அடைந்து உள்ளத்தில் தூய்மை ஏற்பட்டால் உலகத்தை உணரும்நிலை வரும் என்று கூறினுர்.

குன்றத்தூர் சிவனடியார் திருக்கூட்ட சபையைச் சேர்ந்த திரு. திருநாவுக்கரசு முதலியார் பேசுகையில் இந்த வழிபாடு திருவருளோடு குருவருளும் சேர்ந்து மிகச் சிறந்த முறையில் நடந்தது என்றுகூறி, தருமமிகு சென்னையில் தருமபுர ஆதீன சமயப்பிரசார நிலையத்தின் சார்பில் நடைபெற்று வரும் பணிகளைப் பாராட்டி, ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்களுக்கும், நிலையத்தினருக்கும் தம் நன்றி தெரிவித்துக்கொண்டார்.

வித்துவான் திரு. ஏ. ஜெ. இராமசுவாமி முதலியார் குன்றத்தூர் பெருமையைப்பற்றி தான் இயற்றிய ஒருசெய்யுளைப் படித்து அதற்குச் சுருக்கமாக விளக்கமும் கூறினுர்.

முடிவில் நிலைய சுவாமிகள் பேசும்போது, குன்றத்தூரில் உள்ளவர்கள் எல்லோரும் சேக்கிழார் இயற்றிய பெரியபுராணத்தைப் படிக்க வேண்டும்; இறைவனின் அருளைப் பெறுவதற்கு மாதம் ஒருமுறை வழிபாட்டில் கலந்துகொண்டு, பாபத்தைப் போக்கிக் கொண்டு, புண்ணியத்தைத் தேடிக்கொண்டு, நல்ல அறிவுபெற்று, வாழ்வாங்கு வாழ வேண்டும் என்று கூறி, எல்லோருக்கும் நன்றி தெரிவித்து, கூட்டத்தை நிறைவு செய்தார்கள்.

## ஆயில்யத் திருநாள் ஆலய வழிபாடு

திருக்கயிலாயபரம்பரைத் தருமையாதீனம் 26ஆவது ஸ்ரீலஸ்ரீகுருமகாசந்நிதானம் அவர்களின் மாதஜன்மநட்சத்திரமாகிய ஆயில்யத் திருநாள் வழிபாடு 25—7—79 புதன்கிழமையன்று காலை 10 மணி

அளவில் திருவழுந்தூர் (தேரழுந்தூர்) அருள்மிகு வேதபுரீசுவரர் ஆலயத்திலும், மாலை 7 மணியளவில் திருத்துருத்தி (குத்தாலம்) அருள்மிகு உக்தவேதேசுவரர் ஆலயத்திலும் விசேஷ அபிஷேக ஆராதனைகளுடன் சிறப்பாக நடைபெற்றது. இவ்விரு தலங்களிலும் அவ்வத்தலத் தேவாரத் திருப்பதிகங்கள் பாராயணம் செய்யப்பெற்றன. மேலும் அவ்வத்தலத் திருப்பதிகங்கள் அடங்கிய நூல் குறிப்புரையுடனும் தலவரலாற்றுடனும் வெளியிட்டு அன்பர்களுக்கு வழங்கப்பட்டது.

தேரழுந்தூர் திருக்கோயில் வழிபாட்டின்போது வித்துவான் திரு. வி. சா. குருசாமி தேசிகர் எம். ஏ., "திருஞானசம்பந்தர்" என்ற தலைப்பிலும் ஆதீனக் கல்லூரி மாணவர் திரு. மா. கல்யாணராமன் 'சமயகுரவர்' என்ற தலைப்பிலும் விரிவுரைகள் நிகழ்த்தினார்கள். குத்தாலம் திருக்கோயில் வழிபாட்டின்போது வித்துவான். திருமதி. ப. நீலா எம். ஏ., புலவர். திரு. இரா. செல்வக்கணபதி எம். ஏ. ஆகியோர் முறையே "காரைக்கால் அம்மையார்" "நமது குலதெய்வம்" என்ற தலைப்புக்களில் விரிவுரையாற்றினார்கள். அன்பர்கள் பலரும் வழிபாட்டில் கலந்துகொண்டு பயன் பெற்றனர்.

### தருமையாதீனத்தில்

## ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் குருபூஜை விழா

தருமையாதீனம் ஸ்ரீ ஞானபுரீசுவரர் திருக்கோயிலில் 1—8—79 புதன்கிழமை சமயாசாரியர்களுள் மூன்றுமவரான ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் குருபூஜை விழா சிறப்பாக நடைபெற்றது. காலையில் சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கு அபிஷேக ஆராதனைகளும் ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் புராணபடனமும் நடைபெற்றன. ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் காலை மாலை இருபோதும் எழுந்தருளி வழிபாடாற்றி அன்பர்களுக்குப் பிரசாதம் வழங்கி ஆசியருளினார்கள்.

இரவு ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவீதியுலா நடைபெற்றது. அப்பொழுது வேதபாராயணமும் திருமுறைப் பாராயணமும் அற்புத விளக்கச் சொற்பொழிவுகளும் நிகழ்ந்தன. வித்துவான் திரு. வி. சா. குருசாமிதேசிகர் எம். ஏ., வித்துவான் சிரோமணி திரு. வி. சபேசன்' வித்துவான் திரு. இரா. செல்வக்கணபதி எம். ஏ., வித்துவான் திரு. . சிவச்சந்திரன் எம். ஏ., வித்துவான் திரு. கா. ம. கண்ணப்பன், வித்துவான் திரு. மு. ஆறுமுகதேசிகர் ஆகியோர் அற்புதவிளக்கச் சொற்பொழிவுகள் நிகழ்த்தினர். அன்பர்கள் பலர் வழிபட்டும் சொற்பொழிவுகளைக் கேட்டும் பயன் பெற்றனர்.

## மகாகயிலாய தரிசன நினைவுநாள் விழா

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனத்தில் மகாகயிலாயக் காட்சி இருபத்திரண்டாவது ஆண்டு விழா 23—7—1979 திங்கட் கிழமை அன்று சிறப்பாக நடைபெற்றது. சைவ சமயாசாரியர்களில் இரண்டாமவரான அப்பர் சுவாமிகள் கயிலைக் காட்சியைக் கண்டு களித்த ஆடி அமாவாசைத் திருநாளில் தருமையாதீனம் 25 ஆவது ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களும் மகாகயிலாய மலையைத் தரிசித்து மீண்டருளினார்கள். அவர்கள் கயிலைக் காட்சி கண்டருளிய நாள் நினைவாக இவ்விழா சிறப்பாகக்கொண்டாடப்பெறுகிறது. அன்று காலை மாலை இருவேளைகளிலும் ஸ்ரீ சொக்கநாதப் பெருமான் பூஜை மடத்தில் திருக்கயிலாயத் திருவுருவப்படத்திற்குச் சிறப்பு வழிபாடு நடைபெற்றது. பகலில் பண்ணிசைவாணர்கள் அகண்டபாராயண மாகத் திருமுறைப்பாராயணம் நிகழ்த்தினர். இரவு மின் விளக்குகளால் ஒப்பனைசெய்யப்பெற்ற வெள்ளிரதத்தில் திருக்கயிலாயத் திருவுருவப் படத்திருவீதியுலா பண்ணிசைவாணர்களின் திருமுறைப்பாராயணத் துடன் சிறப்பாக நடைபெற்றது. தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள் திருக்கயிலாயத் திருவுருவப்படத்திற்குச் சிறப்பு வழிபாடு நிகழ்த்திப் பக்தர்களுக்கு, பிரசாதம் வழங்கி திருவீதியுலாவி லும் உடன் எழுந்தருளி திரு அருட் காட்சி வழங்கியருளினார்கள். திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் ஸ்ரீமத் காசிவாசி சுவாமிகளும் வழி பாட்டிலும் திருவீதியுலாவிலும் கலந்து கொண்டார்கள். அன்று மாலை 6 மணியளவில் ஸ்ரீ சொக்கநாதப் பெருமான் பூஜை மடத்தில் அறிஞர்கள் பலர் திருக்கயிலாயத் தொடர்பான அரும்பெரும் பொருள் கள் பற்றி விரிவுரையாற்றினார்கள். அன்பர்கள் பலர் வழிபாட்டிலும் திருவீதியுலாவிலும் கலந்து கொண்டதோடு விரிவுரைகளையும் கேட் டுப் பயன் பெற்றனர்.

## ஆதீன தேவஸ்தானங்களில் ஆடிப்பூரத் திருவிழா

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனத்திற்குச் சொந்தமான சீகாழி ஸ்ரீ சட்டைநாத சுவாமி தேவஸ்தானத்தில் ஸ்ரீ திருநிலைநாயகி அம்பாளுக்கும் வேளூர் ஸ்ரீ வைத்தியநாதசுவாமி தேவஸ்தானத்தில் ஸ்ரீ வாலாம்பிகை அம்பாளுக்கும் திருக்கடவூர் ஸ்ரீ அபிராமியம்மைக்கும் திருவையாறு ஸ்ரீ அறம்வளர்த்தநாயகி அம்பாளுக்கும் அடிப்பூர உற்சவம் 17—7—79 செவ்வாய்க்கிழமை தொடங்கிப் பத்துநாட்கள் சிறப்பாக நடைபெற்றது. இந்நாட்களில் அம்பாளுக்கு விசேஷ அபிஷேக ஆராதனைகளும் விசேஷ நாதசுர இன்னிசை முதலியவற் றுடன் அம்பாள் எழுந்தருளலும் நடைபெற்றன. அன்பர்கள் பலர் தரிசித்து அம்மை அருள்பெற்று உயந்தார்கள்.

# செய்திகள்

சென்னை தருமையாதீன சமயப் பிரசார நிலையத்தில்

## நாயன்மார்கள் குருபூஜை விழா

11—6—79 அன்று திருஞானசம்பந்தர், முருகநாயனர், திருநீலநக்க நாயனர், திருநீலகண்ட யாழ்ப்பாணர் குருபூஜை நிலைய பூஜை மடத்தில் நடந்தது. புலவர் திரு. ஏ. நாராயணசுவாமி அய்யர் பெரியபுராணம் வாசித்து விளக்கவுரை செய்தார். பலர் கேட்டு பயன் அடைந்தனர்.

29—6—79 அன்று மாணிக்கவாசக சுவாமிகள் குருபூஜை, மதுரையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் தலைமையில் நடந்தது. தலைமையுரையில், ஆண்டவன் ஆணையின்படி எல்லா உயிர்களும் அவரவர்கள் வினையின்படி ஆட்டிவைக்கப்படுகின்றன. பிரார்த்தனை, வழிபாடு மூலமாக உயிர்கள் உய்திபெறமுடியும். பேறு, இழவு, இன்பம், பிணி, மூப்பு, சாக்காடு முதலிய ஆறும் முற்பிறவியின் வினைவு என்பதை அறிந்து ஆண்டவனிடம் அன்பு செலுத்தி வாழ வேண்டுமென்று ஆசி அருளினர்கள்.

அடுத்து, 'குருவருள்' என்பதுபற்றி திரு. என். ஆர். முருகவேள் எம். ஏ., எம். ஓ. எல்., அவர்களும், 'அழுதால் உன்னைப் பெறலாமே' என்ற தலைப்பில் திரு. வி. எம். மந்திரம் எம் ஏ., பி டி., அவர்களும் விரிவுரைகள் நிகழ்த்தினர்கள். இறுதியில் மதுரை ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் சென்னை வாழ் மக்களுக்குச் சமயப் பண்பையும் ஞானத்தையும், உணர்வையும் பரப்பிவரும் இந்நிலையத்தின் வெள்ளிவிழா அண்மையில் நடைபெறஇருக்கிறது அன்பர்களும் ஆஸ்திகப்பெருமக்களும் ஒன்று சேர்ந்து விழா சிறப்பாக நடைபெற ஆவன செய்யவேண்டும் என்று அருளினர்கள்.

30—6—79 அன்று அமர்நீதி நாயனர் குருபூஜை நிலைய பூஜை மடத்தில் நடந்தது, பேராசிரியர் திரு. ஏ. அய்யாசாமி எம். ஏ. அவர்கள் பெரியபுராணம் வாசித்து விளக்கவுரை செய்தார்கள். பலர் கேட்டுப் பயனடைந்தனர்.

இருக்கும் இந்தவருஷத்தில் மாசிமீ பௌர்ணமி மகநக்ஷத்திரத் தன்று மஹாமகம் என்னும் புண்ணியகாலம்வரும். இது 12 வருஷத் துக்கு ஒருமுறைதான்வரும் அதாவது மாசிமீ பௌர்ணமியில் குரு வும் சந்திரனும் மகநக்ஷத்திரத்தில் சேருவது புனிதம் நிறைந்தது. இவ் வாண்டு மாசிமீ 18உ (1-3-1980) ஸ்திரவாரம் பௌர்ணமி மகநக்ஷத் திரம். இந்நாளில் கும்பகோணத்தில் புண்ணியதீர்த்த முழுக்கு விசே ஷம். இவ்வாண்டு குருபெயர்ச்சியினுல் மேஷம், கடகம், துலாம், தனுசு கும்பம் இவ் விராசியை யுடையோருக்கு, குடும்பசுபிட்சம் மேலிடும். தன தானியங்களின் நிறைவு ஏற்படும். கல்வி கலைகளில் சித்தி ஏற்படும். புத்திரபாக்கியம் உண்டாகும். உத்தியோகம் இராஜ சன்மானம் கிடைக்கும்.

சிம்மம். மீனம் இவ்விராசியையுடையோருக்கு, குருவின் வேதை ஸ்தானத்தில் வேறு கிரக சஞ்சாரம் இருந்துவருவதால் கொடுக்கா தென்றிருந்த நற்பலனை பிடி பிடி' என்று கொடுக்கும். சுவாதிகார மேன்மையைத்தரும். எல்லாக்காரியங்களும் வெற்றிகரமாக நடக்கும். சத்துரு, இருணம், ரோகங்கள் நீங்கும்.

ரிஷபம் மிதுனம் கன்னி விருச்சிகம் மகரம் இவ்விராசியை யுடை யோருக்கு முதல் இரண்டு மாதங்கள், அடுத்த குரு மாறுதலுக்குமுன் இரண்டுமாதங்கள் நன்மை உண்டாகும். மற்றையகாலங்களில் இருப் பிடத்தில் மாறுதல், மனைவி நலம் பாதித்தல், உத்தியோகத்தில் பதவி மாறுதல், பந்துமித்திரர், புத்திரர் இவர்களால் அதிகச்செலவு, பல அறிவாற்றல் இருந்தும் சமயத்தில் பயன்படாத நிலைமை ஆகிய மத்திம பலனுகும்.

எல்லா ராசியையுடையோரும் குருவாரத்தில் சிவாலயம் சென்று ஸ்ரீ தட்சணமூர்த்தி சுவாமிக்கு அபிஷேக ஆராதனைகள் செய்து தரிசித்து வேதம் ஓதுவோருக்குச் சுவர்ணதானம் செய்துவர சுபிட்சம் ஏற்படும்.

**1. மேஷம் :- அசுவதி - பரணி - கார்த்திகை $\frac{1}{4}$**

**( சு. சே. சோ. லா. - லி. லு. லே. லோ. - அ. )**

மேஷராசி 9 பாதங்களும் சுபபலன் தரும். குடும்பாபிவிருத்தியில் பணச் செலாவணி திருப்திகரமாக இருந்துவரும் முன்பு வரவேண்டிய பொருள் கணிசமாக வரும். பூமி இயந்திரங்களில் விருத்தி நிலைமை யாகும். வித்துவத்துவத்தில் நன்மதிப்புதரும். வாகனசுகம் திருப்தி யளிக்கும். தாரபுத்திரர்கள் நலம் நன்றுக இருந்துவரும். எல்லாக் காரியங்களும் வெற்றிகரமாக நடந்துவரும். ஞாயிற்றுக்கிழமை சூரிய அருச்சனைசெய்ய எல்லாநன்மையும் உண்டாகும். ஆவணிமீ 13உ 34 நாழிகை 33 விநுடி முதல் 15உ 49 நாழிகை 56 விநுடிவரையில் சந்திராஷ்டமம். சனி ஞாயிறு சுபமாகும்.

2. ரிஷபம் :- கார்த்திகை $\frac{3}{4}$ - உரோகிணி – மிருகசீர்ஷம் $\frac{1}{2}$

( இ. ஊ. ஏ. - ஒ. வ. வி. வு - வே. வோ. )

ரிஷபராசி 9 பாதங்களும் மிச்சிர பலனுக நடக்கும். குடும்பத்தில் தனுதி சௌகரியங்கள் மேலாக இருந்துவரும். சகோதரர் மனைவி சம்பந்தமாக முக்கிய செலவினங்களும் ஏற்படும். மனோவேகத்துக் குரிய பிரச்சினைகள் வந்து உடன் சரிபடும். வித்துவத்துவம் கலைத் துறைகளில் முன்னேற்றம் ஏற்படும். உத்தியோகம் தொழில் துறை களில் இராஜாங்க அனுகூலம் ஏற்படும். புத்திரர் பௌத்திரர்களுக்கு மேன்மை ஸ்திதி ஏற்படும். ஆவணிமீ 15உ 49 நாழிகை 56 வினுடி முதல் 17உ 59 நாழிகை 56 விஞடி வரையில் சந்திராஷ்டமம். திங்கள் செவ்வாய் சுபமாகும்.

3. மிதுனம் :- மிருகசீர்ஷம் $\frac{1}{2}$ - திருவாதிரை – புனர்பூசம் $\frac{3}{4}$

( கா. கி. - கு. க. ங. ச்சா. - கே. கோ. ஹ. )

மிதுனராசி 9 பாதங்களுப் சுபபலன் தரும். குடும்பாபிவிருத்தி யில் பண வருமானங்கள் திருப்திகரமாக வந்துகொண்டிருக்கும். சகோதரர் முன்னேற்றஸ்திதியில் இருந்துவருவர். இயந்திரசாதனத் தில் நற்பலன் ஏற்பட்டுவரும். வித்தியாவியாபாராதிகளில் - எழுத்து மூலகாரியங்களில் 26உ க்கு அதிக நன்மையை ஏற்படுத்தும். தார புத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். ஆவணிமீ 17உ 59 நாழிகை 56 விஞடி முதல் 20உ 6 நாழிகை 44 விஞடி வரையில் சந்திராஷ்டமம். வியாழன் வெள்ளி சுபமாகும்.

4. கடகம் :- புனர்பூசம் $\frac{1}{4}$ – பூசம் – ஆயில்யம்.

( ஹி. - ஹு. ஹே. ஹோ. ட. - டி. டு. டே. டோ. )

கடகராசி 9 பாதங்களும் நற்பலன் தரும். குடும்ப சுபிட்சம் தன சௌகரியம் நன்ருக இருந்துவரும். வித்தியா வியாபாராதி கலைத் துறைகளில் முன்னேற்றம் ஏற்படும். விஞ்ஞான தத்துவஞான விஷயங்களில் 9உக்கு புத்துணர்வான நிலைமையாகும். தொழில்துறை விர விருத்திகளில் முதலீடு ஆகச்செய்யும். தாரபுத்திரர்களின் சௌக் கியம் நன்ருக இருந்துவரும். ஆவணிமீ 20உ 6 நாழிகை 49 விஞடி முதல் 22உ 12 நாழிகை 43 விஞடி வரையில் சந்திராஷ்டமம். சனி ஞாயிறு சுபமாகும்.

5. சிம்மம் :- மகம் - பூரம் – உத்திரம் $\frac{1}{4}$

( ம. மி. மு. மே. - மோ. ட. டி. டு. - டே. )

சிம்மராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுக நடக்கும். குடும்பா விருத்தியில் நல்ல பணவருமானங்கள் வந்துகொண்டிருக்கும். சகோதரர் சகோதரிகளின் க்ஷேமம் நன்ருக இருந்துவரும். பூமி இயந் திரங்களில் விருத்திபலன் ஏற்படும். வித்தியா வியாபாராதிகளில்

எழுத்துமூலகாரியங்களில் 2வ்ஊ அளவில் நன்மை ஏற்படும். தாரபுத்திரர்கள் நலமாக இருந்துவருவர். ஆவணிமீ 22உ 12 நாழிகை 43 விநுடி முதல் 24உ 19 நாழிகை 41 விநுடிவரையில் சந்திராஷ்டமம். திங்கள் செவ்வாய் சுபமாகும்.

**6. கன்னி :- உத்திரம் $\frac{3}{4}$ - ஹஸ்தம் - சித்திரை $\frac{1}{2}$**

**( டோ. ப. பி. - பு. ஷ. ண. ட. - பே. போ. )**

கன்னியாராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுக நடக்கும். பண வருமானங்கள் சீராக இருந்துவரும். செலவுமிகும். குலசம்பிரதாயமான காரியங்களைச் செய்யும். வித்துவத்துவம் கலைத்துறைகளில் பிரசித்தம் ஏற்படும். பூமிசம்பந்தமாக சர்ச்சை ஏற்பட்டு உடன் நீங்கும். உத்தியோக பிராப்தியில் 2வ்ஊ அளவில் மகிழ்ச்சிக்குரிய நிலைமையாகும். தாரபுத்திரர்களுக்குச் சௌக்கிய பலன்தரும். ஆவணிமீ 24உ 14 நாழிகை 46 விநுடி முதல் 26உ 31 நாழிகை 25 விநுடி வரையில் சந்திராஷ்டமம். புதன் வியாழன் சுபமாகும்.

**7. துலாம் :- சித்திரை $\frac{1}{2}$ – சுவாதி – விசாகம் $\frac{3}{4}$**

**( ர. ரி. - ரு. ரே. ரோ. தா. - தி. து. தே. )**

துலாராசி 9 பாதங்களும் சுபபலன் தரும். குடும்பாபிவிருத்தியில் பண வருமானங்கள் பலவிதத்தில் வந்துகொண்டிருக்கும். சகோதரர் நலம் நன்ருக இருந்துவரும். பிதாவின் உடல் நலம் பாதிக்கினும் உடன் குணமாகும். வித்தியா வியாபாராதி கலைத்துறைகளில் முன்னேற்ற ஸ்திதியாகும். வீடு வாகனுதிகளின் சௌகரியம் நன்ருக இருந்துவரும். தாரபுத்திரர்களுக்குச் சுகம்தரும். ஆவணிமீ 26உ 30 நாழிகை 25 விநுடி முதல் 28உ 46 நாழிகை 3 விநுடி வரையில் சந்திராஷ்டமம். வெள்ளி சனி சுபமாகும்.

**8. விருச்சிகம் :- விசாகம் $\frac{1}{4}$ - அனுஷம் – கேட்டை.**

**( தோ. - ந. நி. நு. நே. - நோ. ய. யி. யு. )**

விருச்சிகராசி 9 பாதங்களும் நற்பலனைத்தரும். குடும்ப சுபிட்சம் நன்ருக இருந்துவரும். தன வருமானங்கள் வந்துகொண்டிருக்கும். இயந்திர சாதனங்களில் விருத்திபலன் ஏற்படும். தெய்வ தரிசனம் நல்லோர் பெரியோர்களின் சந்திப்பு ஆகிய மகிழ்ச்சி சம்பவங்கள் ஆகும். ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமிக்கு அருச்சனை செய்ய விபத்துக்கள் நீங்கும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். ஆவணிமீ 28உ 46 நாழிகை 3 விநுடி முதல் 31உ 9 நாழிகை 55 விநுடி வரையில் சந்திராஷ்டமம். திங்கள் செவ்வாய் சுபமாகும்.

**9. தனுசு :- மூலம் – பூராடம் – உத்திராடம் $\frac{1}{4}$**

**( யே. யோ. பா. பி. - பு. த. ப. ட. - பே.)**

தனுர்ராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுக நடக்கும். குடும்பாபிவிருத்தியில் பண வருமானம் ஓரளவு வந்துகொண்டிருக்கும். சகோ

தரம் பந்து அம்மான்களின் நலனில் செலவினங்களும் ஏற்பட்டுக் கொண்டிருக்கும். வீடு வாகனங்களின் சௌகரியம் திருப்தியளிக்கும். வித்துவத்துவம் கலைத்துறைகளில் எழுத்துமூல காரியங்களில் மாத வின்பகுதியில் சிலாக்கியபலன் ஏற்படும். கணவன்மனைவியரிடையே பிணக்கு வந்து உடன் சரிபடும். ஆவணிமீ 4. 5, 6. 31உ கள் சந்திராஷ்டமம். வியாழன் வெள்ளி சுபமாகும்.

**10. மகரம் :- உத்திராடம் $\frac{3}{4}$ – திருவோணம் – அவிட்டம் $\frac{1}{2}$**

(போ. ஜ. ஜி. - கி. கு. கே. கோ. - கா. கி.)

மகரராசி 9 பாதங்களும் மிச்சிரபலனாக நடந்துவரும். குடும்பாபி விருத்தியில் பண வருமானம் சீராக இருந்துவரும். சகோதரருக்கு அரசாங்க நன்மை ஏற்படும். வீடுவாகனாதிகளின் சௌகரியம் திருப்தி யளிக்கும். வழக்கு விவகாரம் ஜெயிக்கும். ரோகம் நிவர்த்தியாகும், தாரபுத்திரர்களின் நலம் நன்றாக இருந்துவரும். எல்லா பொதுநல ஈடு பாட்டிலும் நன்மதிப்பைத்தரும். ஆவணிமீ 6உ 17நாழிகை7வினாடி முதல் 8உ 46 நாழிகை 19 வினாடி வரையில் சந்திராஷ்டமம். திங்கள் செவ்வாய் சுபமாகும்.

**11. கும்பம் :- அவிட்டம் $\frac{1}{2}$ – சதயம் - பூரட்டாதி $\frac{3}{4}$**

(கு, கே. - கோ. ஸ. ஸி. ஸு. - ஸே. ஸோ. தா.)

கும்ப ராசி 9 பாதங்களும் சுபபலன் தரும். குடும்பாபிவிருத்தியில் தனவருமானங்கள் வந்து கொண்டிருக்கும். சகோதரர் நலம் நன்றாக இருந்துவரும். வித்துவத்துவம் கலைத்துறைகளில் அரசாங்கத் தொடர் புடைய விஷயங்களில் மதிப்பு உயரும். தாரபுத்திரர் இவர்களின் சௌக்கியம் நன்றாக இருந்துவரும். ஆவணிமீ 8உ 46 நாழிகை 19 வினாடி முதல் 11உ 13 நாழிகை வரையில் சந்திராஷ்டமம். புதன் வியாழன் சுபமாகும்.

**12. மீனம் :- பூரட்டாதி $\frac{1}{4}$ – உத்திரட்டாதி – ரேவதி.**

(தி. - து. ஸ. ச. த. - தே. தோ. ச. சி.)

மீன ராசி 9 பாதங்களும் நற்பலன் தரும். குடும்பாபிவிருத்தியில் தன வருமானம் நல்லவகையில் வந்துகொண்டிருக்கும். குடும்பச் சம்பிரதாய விசேஷங்கள் நல்லவிதமாக நடந்துகொண்டிருக்கும். இதய படபடப்பு ஏற்பட்டு உடன் குணமாகும். வித்தியா வியா பாராதி கலைத்துறைகளில் அரசாங்க நன்மையை ஏற்படுத்தும். நவீன வஸ்துக்கள் வாங்குதல் ஆகும். தாரபுத்திரர் இவர்களின் நலம் நன்றாக இருந்துவரும். ஆவணிமீ 11உ 13 நாழிகை முதல் 13உ 34 நாழிகை 33 வினாடி வரையில் சந்திராஷ்டமம். வெள்ளி சனி சுபமாகும்.

---